மட்டறு பவக்கட றொலைக்குமொரு கப்பூ
மரக்கலமு நீயல்ல வோ
அந்நியம தானபிர பஞ்சமாம் பெருநெருப்
படக்கும் பெரும்பா லமா
யன்புட னெனைப்பெற்ற வப்பனே யருட்டந்
தாண்டவனு நீயல் லவோ
என்னையுனை யன்றியினி யாள்வரெவ ரையனே
யெந்தையே யெம்பி ரானே
இகபர மிரண்டினுஞ் சுகதுக்க மற்றியா
னீடேற வருள்பு ரியவே
நன்னிலைய மாகவென் மூன்னிலையில் வந்துமெந்
நாளும்ரட்சித் தருள் வையே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. (௬)

இரக்கத்திருநந்தம்.

கல்லு மொருபோதிற் கரைந்துருகு மென்மனக்
கற்கரைவ தில்லை யனே
கவலைகளை யிவளவென் றென்றுனை யென்றுற்
கணித்துமுடி கூடு திலையே
அல்லுபக லாகவென் னவகீர்த்தி யவகீர்த்தி
யம்மம்ம வென்சொல் லுகேன்
ஆனலு மார்க்காக வடிமைகொண் டாயிந்த
வடியனே னுய்யும் வண்ணஞ்
சொல்லுமெய்ஞ் ஞானச் சுகக்கடலை யுண்டியான்
சும்மா விருக்க வருள்வாய்
சுத்தபரி பூரணச் சுகவாரி தன்னிலோர்
சொட்டாகி னுந்தொட்ட பேர்

நல்லவர்க ளல்லவர்க ளல்லவர்க ளென்றைக்கு
நானு நல்லவ னவனோ
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. (எ

பெருமையினானந்தம்.

சொல்லான் முழக்கமிட் டோலமிடு வேதமுஞ்
சொன்னது டனின்ன மின்னஞ்
சுருதிமுத லாகம புராணகலை யோதிய
சுலோகங்க ளென்சொல் லுகேன்
பல்லா யிரங்கோடி யண்டபகி ரண்டமுன்
பாதபங் கயமல் லவோ
பரிபூர ணனந்த மேயுனது முடியெனப்
பகர்வதும் பொய்யா குமோ
வல்லா னெனும்பெய ருனக்குள்ள தல்லாது
மற்றவர் தமக்கு முளதோ
வானவர் தினந்தினம் வந்துன் பதம்பணியு
மகிமைசொல வாயு முண்டோ
நல்லோர் தமக்கலா தெல்லார் தமக்குமுனை
நவிலுதற் கெளிதா குமோ
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. (அ)

தன்னிலையினானந்தம்.

நித்திரை தனிற்செத்த பொய்யான மெய்யுடலை
நிலையமென் றிடுவ தல்லால்
நிலையாத காயமென் றெண்ணவோர் கனவினு
நிசமாக யான றிகிலேன்
எத்தனை விதங்கடான் கற்கினுங் கேட்கினு
மென்மன திணங்கு திலையே

ஏதென் றெடுத்துரைப் பேனெமக் கிறைவனே
யெங்கோ னெனும் பிரானே
மற்றவர்க ளெத்தனை யிருக்கினு மென்கொடிய
வல்வினை யகற்ற வசமோ
மலையிலக் கெனநம்பி னேனம்பி னேனென்று
வந்தெனுட் குடிகொள் வையே
நற்றவமு முத்தியுஞ் சித்தமவைத் தருள்செய
நாட்செல்லு மோவ றிகிலேன்
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. (க)

காரணத்திறுநந்தம்.

கடலிற் கவிழ்ந்ததோர் கப்பலா லாத்துடன்
கடுகிவர வேய ழைத்தீர்
கம்பமுட னோடியே வந்ததோர் கப்பலைக்
கடிபூனை யாக்கி வைத்தீர்
குடிகொண்டு கர்ப்பவறை யுள்ளிருக் கையிலுமைக்
கொலைசெய்ய வந்த முனியைக்
குதிகொண்டு வெளிசென் றிருதுண்டு கண்டபின்
கூர்கர்ப்ப வறைபு குந்தீர்
பிடியிற் பிடித்துண்ட பிள்ளைசந் நியாசிகுடர்
பீறிவர வேய ழைத்தீர்
பிரியம்வைத் தெனையாள வென்னிடத் திந்தவிரு
பேரையுந் தூது விட்டீர்
நடனமிடு பாதார விந்தமென் சென்னியுற
நாட்செல்லு மோசொல் லுமே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. (க0)

ஆனந்தமாகிய பேரின்ப வனுபோகநிலையாற்கூறிய இப்பத்துக்
கவியுங் குருபரனை யொருபரனைக் கொண்டாடித்
தோத்திரஞ்செய்தது.

முற்றிற்று.

# முகியித்தீன் சதகம்.



ஏகவறிவாகிய வள்ளலிறசூலைத் தொடர்ந்தவரருட்பெறு
வான் பொருட்டாக முன்னிலைக் குருவாகிய முகி
யித்தீன் ஆண்டகையைத் தோத்திரஞ்செய்து
குறையிரந்துவந்து பாடிய சதகம்.

குருவணக்கம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

உணர்ந்துதற் பரமா யுணர்ந்தவோ சரமா
யுயிர்க்குயி ரானசா கரமாய்
இணங்குசிற் பரமா யணுக்கடா வரமா
யேகமா கியபரா பரமாய்
வணங்கிக பரமாய்க் கிளைத்தநா ஹுமுகம்
மதுகிளை விளக்கொளி கொழிக்குங்
குணங்குடி வாழு முகியித்தீ னெமென்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம். (௧)

வணங்குவார்க் கிணங்கு பெரிய பேரின்ப
வாரியிற் படிந்துவாய் மடுத்தே
உணர்ந்துணும் பொருட்டாய் வலியவந் தெனையாண்
டுவந்துளங் களித்தக மகிழ்ந்தே
அணைந்தணைந் தெடுக்குங் கருணைகொப் புளிக்கு
மலகிலா வருளடை கிடக்குங்
குணங்குடி வாழு முகியித்தீ னெமென்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம். (௨)

அணைந்துயிர்க் குயிரா யலர்மட லவிழ்ந்த
வகண்டிதா காரமா மலரின்

மணங்கமழ் நயினார் முகம்மத ரென்னு
　　மௌனதே சிகருட னெனையுந்
துணிந்துமா மாயைத் துணியெலாங் கிழித்துத்
　　துறவறந் தாங்கிய ராக்குங்
குணங்குடி வாழு முகியித்தீ னென்மன்
　　குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம். (ஙு)

நான்முகம்.

மாயா விநோத மெல்லா மறைந்து
ஆயாதி யுண்மைச் சுயம்பிர காசிக்கக்
காரணக் குருவின் கருணையந் தொடர்பால்
ஆரணக் குருவே யருள்கவென் றிரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

ஆதிமுன் னிற்கவே யகதுகது வாகிநிய்
　　யத்தெனது முன்னிற்கவே
யத்துவித வஸ்துமுன் னிற்கவே யறிவகண்
　　டாகார முன்னிற் கவே
போதமுன் னிற்கவே போதமனு காதபரி
　　பூரணம் முன்னிற் கவே
பொங்குசிவ ஞானமுன் னிற்கவே வானாதி
　　பூதலய முன்னிற் கவே
நாதமுன் னிற்கவே நாதவொளி பெற்றநடு
　　நாயகம் முன்னிற் கவே
நானுமுன் னிற்கவடி யேனுமுமை நம்பினே
　　னன்மைதந் தாளு தற்கே
மாதா வினுங்கருணை யுள்ளநீர் பின்றொடர
　　வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ளிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
　　மணியே முகியித் தீனே. (க)

நீக்கமற வெங்கெங்கு நின்றுநிறை கின்றபொரு
ளேனியெலன் முன்னிற் கவே
நிர்விஷய சுத்தமா சற்றபர வெளியான
நிர்க்குணமென் முன்னிற் கவே
தாக்கிமா கோடிமறை வாக்கியம் பகறயுமா
தத்வமென் முன்னிற் கவே
தத்துவா திகளற்ற முத்திக்கு வித்தான
சற்குருவென் முன்னிற் கவே
போக்குவர வற்றபரி பூரண னந்தமெய்ப்
போதமென் முன்னிற் கவே
புன்மைகுடி யானவடி யேனுமுமை நம்பினேன்
பொய்மைதீர்த் தாளு தற்கே
வாக்குமா ருதநாக் குள்ளநீர் பின்றொடர
வள்ளலிற ஞல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
இகபர மிரண்டொன்று வகையுண்டு வெளிகண்ட
வீசனென் முன்னிற் கவே
ஏகமா கியபரா பரமெனது முன்னிற்க
வெப்பொருளு முன்னிற் கவே
வகைதொகுத் தோலமிடு மறைகண்முர சறைகின்ற
வள்ளலென் முன்னிற் கவே
வாளுதி பூதமுந் தாளுகி நின்றபெரு
மானெனது முன்னிற் கவே
அகமகிழ வந்தகுடி கொண்டகுரு நாதனடி
யாருமென் முன்னிற் கவே
அன்றுமின் றென்றுமடி யேனுமுமை நம்பினே
னண்டிவந் தாளு தற்கே

## மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

மகிழ்துன்னு புன்னகைப் புள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
நோக்குநோக் கொண்ணாத நோக்குநோக் காநின்ற
நோக்கெனது முன்னிற் கவே
நோக்கிப் புராதனப் பொருளான நுண்ணறிவி
னுட்பமென் முன்னிற் கவே
நீக்கமற வங்கிங் கெனாதெவங் கெங்குமொரு
நிறைவெனது முன்னிற் கவே
நேசித்த நெஞ்சமே குடிகொண்ட வான்கருணை
நேயமென் முன்னிற் கவே
போக்கொடு வருத்தொடு விகாரமது வாய்நின்ற
புநிதமென் முன்னிற் கவே
புல்லறிஞ னானவடி யேனுமுமை நம்பினேன்
போதுமென வாகு தற்கே
வாக்குமன மொத்தமர புள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
ஏற்றாத மாயைதனை யெற்றுபே ரெற்றுபே
ரின்பமென் முன்னிற் கவே
ஏகமா யொருகால மழியாத வொளியான
வெம்பிரான் முன்னிற் கவே
புத்திக்கு மெட்டாத வட்டாங்க யோகமழை
பொழிவதென் முன்னிற் கவே
பூதமுத னாதமுட னேதுமது வானவான்
பொருளெனது முன்னிற் கவே

குற்றமின் னற்குணங் குடியா னெனுங்குணக்
  குன்றெனது முன்னிற் கவே
கொடுமைகுடி கொண்டவடி யேனுமுமை நம்பினேன்
  குறைவு தீர்த்தாளு தற்கே
வற்றா வருட்செல்வ முள்ளாநீர் பின்றொடா
  வள்ளலிற சூல்வரு கவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித் தீனே. (௫)

ஊரற்று நாமரூ பத்துடன் பற்றற்
  றுயர்ந்ததென் முன்னிற் கவே
ஒன்றற் றிரண்டற்று வாக்கற்று மனமற்
  றுதித்ததென் முன்னிற் கவே
கூறுகுண மற்றுமொளி யற்றும்வெளி தத்திக்
  குதித்ததென் முன்னிற் கவே
குறியற்று மறிவற்று நிறைவுகுறை வற்றுங்
  குலாவியதென் முன்னிற் கவே
ஈறுமுத லற்றுமின் றற்றுநா ளையுமற்
  றிருப்பதென் முன்னிற் கவே
எதுமுன் னிற்கவடி யேனுமுமை நம்பினே
  னின்பமுற் றாளு தற்கே
மாறிலா நற்கருணை யுள்ளாநீர் பின்றொடர
  வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித் தீனே. (௬)

தேடியே வந்தரு டந்தமை கொண்டவென்
  றேசிகன் முன்னிற் கவே
சிற்பர வெளிக்கொளி கொழுக்குமா கர்ப்பூர
  தீபமென் முன்னிற் கவே

## மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

நாடரிய செஞ்சுடர் பரப்புகுரு நாதனெனு
    நாளுமென் முன்னிற் கவே
நாளு விதங்கொண்ட வாசாம கோசரா
    நந்தமென் முன்னிற் கவே
ஈடுசோ டற்றசிற் சத்தியா மெம்பிரா
    னென்னெதிரின் முன்னிற் கவே
ஏற்கைமுன் னிற்கவடி யேனுமுமை நம்பினே
    னிங்குவந் தாளு தற்கே
வாடாத சமநிலைய முள்ளநீர் பின்றொடர
    வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித் தீனே.
அருளகண் டாகார வானந்த பூர்த்தியெனு
    மாதார முன்னிற் கவே
அதிசொற்ப்ர காசவரு டேசோம யந்தந்த
    வாதிக்க முன்னிற் கவே
குருநாத னைகமெய்ப் பிரணவ சொரூபக்
    கொழுந்தெனது முன்னிற் கவே
கூறரிய சாலம்ப ரகிதமா கியதிவ்ய
    குணசாந்த முன்னிற் கவே
நிருவிகா ரத்துடன் றளதனென நின்றொளிர்
    நிராமயம் முன்னிற் கவே
நிலையமுன் னிற்கவடி யேனுமுமை நம்பினே
    னேயம்வைத் தாளு தற்கே
மருமலர் மணக்கோல முள்ளநீர் பின்றொடர
    வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித் தீனே.

பலவுமா யொன்றுமா யென்றுமாய் நின்றதற்
 பரமெனது முன்னிற் கவே
பாமான தெப்பொருளு மதுவாய் மூளைத்துவிளை
 பயிரெனது முன்னிற் கவே
நிலைசரமொ டிகபாமு மூயிரினுக் குயிராகி
 நின்றதென் முன்னிற் கவே
நேரிட்ட ஞானகு ரியனு யுதித்தநன்
 னெறியெனது முன்னிற் கவே
அலையுலகு கானலின் னீரெனத் தோன்றுமெய்
 யறிவெனது முன்னிற் கவே
அய்யனே யஞ்சியடி யேனுமுமை நம்பினே
 னுதரித் தாளு தற்கே
மலையிலக் கானகுறி யுள்ளநீர் பின்றொடர
 வள்ளலிற ருல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
 மணியே முகியித் தீனே.
உடல்பொருளொ டாவியுங் கைப்பற்றி யெனையாளு
 முத்தமன் முன்னிற் கவே
ஊனுகி யுயிராகி யூனுயிர்க் குயிரான
 வுண்மையென் முன்னிற் கவே
திடமாயை தொடரா தடர்ந்தேறு மெய்ஞ்ஞான
 தீரமென் முன்னிற் கவே
திவ்யகரு ணுகர முகம்மத ரெனும்மருட்
 செல்வமென் முன்னிற் கவே
கொடியோடு கொழுகொம்ப தாகநீர் வந்துறுதி
 கொண்டெனது முன்னிற் கவே
கொத்தடிமை யானவடி யேனுமுமை நம்பினேன்
 கொண்டெனைந் தாளு தற்கே

மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

வடிவிலகு நடனவடி வுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.

ஆ பாடல்-உச.

---

அப்பொரு டானே யெப்பொருட் குணமு
மொப்பிய மொப்பா தாகிய வுண்மையைப்
பிரியாது தெரிசிக்கப் பிரியமா யெனக்குங்
கருணைகூர்ந் தருள்கெனக் கணிந்துநின் றிரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

நித்தமாய் நன்னிருவி கற்பனிட் டாபரக
ணெற்றினே ரிட்ட பொருளே
நிச்சய வகோசரத் தாதார பேதமிலை
நின்றுநிறை கின்ற பொருளே
முத்திக்கு வித்தாய் முளைத்துவிளை பொருளையருண்
மொய்த்தசுட ருற்ற பொருளே
மும்மண்ட லங்களுங் கொண்டமு லாதார
மோனவடி வான பொருளே
புத்திக்கு மெட்டாது புத்திக்கு ணின்றிலகு
போக்குவர வற்ற பொருளே
போதவருள் புரியவடி யேனுமுமை நம்பினேன்
புனிதமுட னுளுதற்கே
மத்தமத யானைநிக ருள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.

பெந்தமொடு முத்தியு மகிழ்ச்சியு மிகழ்ச்சியும்
பின்னுமுன் னுங்கெட் டதைப்
பெரிதுசிறி தருவுருவொ டருவிதென் பதுவும்
பிறப்பிறப் புங்கெட் டதை
நீந்தித்த லோடுவந் தித்தலும் பொய்ம்மையொடு
நிசமென்ப துங்கெட் டதை
நீநானெ னலுமொன் றிரண்டெனலு நீதமொட
நீதமென லுங்கெட் டதை
அந்திபகல் போக்குடன் வரவுமன வாக்கொடிங்
கங்கென்ப துங்கெட் டதை
அறியாம லறியவடி யேனுமுமை நம்பினே
னறிவுதந் தாளுந் தற்கே
வந்தடிமை கொள்ளமன முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (உ)
முத்தைநவ மணியையொளி பத்திபா யும்மணியை
மோனமணி ஞான மணியை
மொய்த்தகதிர் மாசிலா மணியைவா னுதியா
மூவுலகு மான மணியைச்
சித்திமணி யைச்சித்தி தருமுத்தி மணியையென்
சிந்தைகுடி கொண்ட மணியைத்
திவ்யகுரு மணியா விழைத்தசிங் காசனச்
சிகரத்தி னுச்சி மணியைப்
பத்தர்கட் கெய்துகு டாமணியை நிறைபார்த்த
பரமார்த்த மானமணியைப்
பணிபூண்டு பார்க்கவடி யேனுமுமை நம்பினேன்
பணிபூட்டி யாளுதற்கே

வைத்ததீ பத்திளிக ருள்ளாகீர் பின்ரெடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (க)

காரா றெனப்பே ரருட்கடலி னிருண்டு
கவிகின்ற கருணை முகிலைக்
ககனவட் டப்பெரு வெளிக்குமப் பாலின்று
காலூன்று கின்ற முகிலைத்
தாராத வருடந்த குருமௌன முகிலையென்
றுயிற் சிறந்த முகிலைச்
சண்டமா ருதமென்ன வருள்பொழியு முகிலைச்
சராசரங் கொண்ட முகிலைப்
பாராதி பஞ்சவன் னப்பகுதி யாகப்
பார்த்துவரு டித்த முகிலைப்
பரவிவரு டிக்கவடி யேனுமுமை நம்பினேன்
பருவம்வந் தாளு தற்கே
வாரா நெறிக்கருணை புள்ளாகீர் பின்ரெடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (உ)

தத்தியே கங்கறப் பெருகிவரு மானந்த
சமரசப் பெருவா ரியைச்
சார்ந்தன்ப ரிதயங் களிக்கவே பொங்கிவரு
சந்ததச் சுகவா ரியைச்
சுற்றிக் கவிந்துகொண் டெங்குமொரு மிக்கவே
சூழ்கருணை நிறைவா ரியைச்
சொற்பிரகா சந்தரு சுயஞ்சோதி யாய்நின்ற
சோமசுந் தரவா ரியை

## மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

எத்தனை விதங்கொண்டு சொல்லினுஞ் சொல்லொணா
    வினியபூ ரணவா ரியை
எப்பமிட ஊட்டவடி யேனுமுமை நம்பினே
    னெட்டிவந் தாளு தற்கே
மத்திபத் தீபநடு வுள்ளநீர் பின்றொடர
    வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித் தீனே. (௫)

அன்புப் பெருக்கைநல் லறிவுப் பெருக்கைமெய்ஞ்
    ஞானுயிர் தப்பெ ருக்கை
அணையற்ற பேராசை வெள்ளப் பெருக்கையறி
    வாகார வான்பெ ருக்கை
இன்பப் பெருக்கையருள் பொங்கும்பெ ருக்கைவெளி
    யெங்கெங்கு மொளிபெ ருக்கை
ஏகப் பெருக்கையனு போகப் பெருக்கைநல்
    லினியசெந் தேன்பெ ருக்கைத்
தென்புப் பெருக்கைவெகு டம்பப் பெருக்கைமா
    திவ்யமது ரப்பெ ருக்கைச்
சேரப்புகட்டவடி யேனுமுமை நம்பினேன்
    சித்தம்வைத் தாளு தற்கே
வன்புப் பெருக்கைவடி வுள்ளநீர் பின்றொடர
    வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித் தீனே. (௬)

கண்டபொரு ளத்தனையு மாகிநின் றவைகளுங்
    காணாத காரணத்தைக்
கருதரிய சித்தாய் விசித்திரமாய் நின்றிலங்
    காநின்ற காரணத்தை

## மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

அண்டகோ டிகளையும் தன்னுள்வைத் தணுவினுக்
கணுவான காரணத்தை
அறியாம லென்றெய்வ மூன்றெய்வ மென்பார்க்கு
மவ்வகைக் காரணத்தை
யெண்டிசை விளக்கின்ற வித்தா யிருந்துமோ
ரிடமற்ற காரணத்தை
எய்திக் களிக்கவடி யேனுமுமை நம்பினே
னெதிர்காட்டி யாளு தற்கே
மண்டலமும் விண்டலமு முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
நிலையமுட னெங்கணுங் கோத்தகிலை குலையாது
நின்றதே சோம யத்தை
நெற்றிவிழி யூடுநிலை நின்றோ ருளர்தனி
னொளித்ததே சோம யத்தை
தொலையா திலங்குதுரி யாதீத மானவத்
துவிததே சோம யத்தைத்
தொந்தங் கடிந்தவர்க ளுந்திக்குள் வண்டாய்த்
துவண்டதே சோம யத்தைச்
சலியாத வயிராக்ய தீரனை யலுப்பறச்
சார்ந்ததே சோம யத்தைச்
சாமுனெற் கருளவடி யேனுமுமை நம்பினேன்
சலுதிவந் தாளு தற்கே
மலிகருணை மிக்கவலு வுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.

எல்லைநிலை சொல்லரிய வல்லமையோ டெங்கணு
மிருந்தனா ளேதை யத்தை
எப்பொருளு மெப்பொழுது மெவ்விடமு மவ்வடி
விலங்குனா ளேதை யத்தை
அல்லினும் பகலினு மன்பர்மன வில்லினி
லடைந்தனா ளேதை யத்தை
அழியாப் பதிக்குவந் தாள்குணங் குடியா
ரிணைந்தனா ளேதை யீத்தைத்
தொல்லையறு நல்லறிஞர் சொல்லும்வழி செல்லின்வெளி
தோற்றுனா ளேதை யத்தைத்
தொழுதெழாப் பாவியடி யேனுமுமை நம்பினேன்
ளுண்டுகொண் டாளு தற்கே
வல்லபஞ் சொல்லவந் துள்ளநீர் பின்ஞெருடர
வள்ளவிற குல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே மூகியித் தீனே.
தொலையாத வான்கருணை குடிகொண் டிருந்ததே
சோமயா நந்த குருவைச்
சொர்தமுட னென்றனையும் வந்தடிமை கொண்டே
சுகந்தந்த மௌன குருவை
நிலையாத மாயைநிலை குலையநிலை குலையாத
நெறிதந்த ஞான குருவை
நித்தியா நந்தசுக முற்றுமகு மூதென்ற
நிட்டைநே ரிட்ட குருவைச்
சலியா தணைத்தமுத் தந்தர வெனைப்பெற்ற
தந்தையாய் வந்த குருவைத்
தழுவவறி யாதவடி யேனுமுமை நம்பினேன்
றயைபுரிந் தாளு தற்கே

மலைகள்பொடி படநடையு முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௧௦)

அ. பாடல்-௩௪.

பன்மையாய் விரிந்த பல்பொரு ளெலாமதன்
றன்மையா யிருந்த தகுதியை விளக்கும்
அருளொளி விளக்கினை யருள்கவென் றுசான்
றெருளொளி பதமலர் சிந்தைசெய் திரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

எங்குமருள் விரிவாகி யங்கிங் கெனுதாகி
யென்றன்பி ரானு மாகி
எண்ணரிய வண்டபகி ரண்டங்க ளாகியின்
றிகபர மிரண்டு மாகிப்
பொங்கிவழி கொண்டுபல் கடமெலாம் பெருகுபரி
பூரண னந்த மாகிப்
புனிதமெய்ஞ் ஞானவா னந்தமழை மாரியைப்
பொழிகருணை முகிலு மாகிக்
கங்குல்பக லில்லிரவி மதியாகி யெங்கொரு
கங்கற்ற கங்கை யாகிக்
கவியுமொளி புரியவடி யேனுமுமை நம்பினேன்
கருணைவைத் தாளு தற்கே
மங்காத திங்களொளி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே

ஊனாகி யூனிலுயி ராகியெவ் வுலகுமா
யொன்றா யிரண்டு மாகி
உள்ளாகி வெளியாகி யொளியாகி யிருளாகி
யூருடன் பேரு மாகிக்
கானாகி மலையாகி வளைகடலு மாகிமலை
கானக விலங்கு மாகிக்
கங்குல்பக லாகிமதி யாகிரவி யாகிவெளி
கண்டபொரு ளனைவு மாகி
நானாகி நீயாகி யவனாகி யவளாகி
நாதமொடு பூத மாகி
நாடுமொளி புரியவடி யேனுமுமை நம்பினே
னன்மைசெய் தாளு தற்கே
வானோரு மடிபணித லுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௨)
அந்தமுதன் முன்பினொடு பக்கநடு வாகிநின்
றவைகளற் றதுவு மாகி
அருவாகி யுருவாகி யருயுருவ மற்றவரி
வாகார மோன மாகித்
தந்தைதா யாகியரு டந்தகுரு வாகியென்
றன்னுயிர்க் குயிரு மாகித்
தாயிற் சிறந்தவங் நேயச் சிறப்பாய்ச்
சதானந்த ஞான மாகிச்
சிந்தைசெய வந்ததிற மாகியெனை யாட்கொண்ட
தேசிகன் றானு மாகித்
தெளிபுமொளி புரியவடி யேனுமுமை நம்பினேன்
சித்திதந் தாளு தற்கே

வந்திருந் தருளுதயை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௩)

பாராகி யெப்பொருளு மாகியப் பார்தனிற்
பஞ்சவன் னங்க ளாகிப்
பற்பல விதங்கொண்ட வீர்துநா தத்துட்
பதிந்துமுளை பருவமாகி,
வேரோடி யோக பூமிக்குள் வளர்ந்தருள்
விளைந்தொழுகு தருவு மாகி
விண்ணாகி மண்ணாகி யெண்ணாகி யெகுவாகி
விரிவாகி மறையு மாகி
ஆராதி யாரத்தி னுள்ளார மாகியதி
சூழ்ச்சிச் சமீப மாகித்
தோற்றுமொளி புரியவடி யேனுமுமை நம்பினேன்
றுரிதமுட னோடு தற்கே
வாராரு மருண்மாரி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௪)

பார்த்ததிக் கெங்குமொரு வெளியாகி யென்பரா
பரப்பிரம வெளியு மாகிப்
பற்றுமன வெளியாகி மனவெளி கடந்தழுப்
பாழான வெளியு மாகிக்
கூர்த்தவறி வத்தனையு மேற்றபடி கொள்ளையே
கொண்டகடு வெளியு மாகிக்
கோடானு கோடிபல வண்டபகி ரண்டமுங்
கொண்டபெரு வெளியு மாகிச்

சேர்த்தநிலை குலையுண்டு போகாது நிலையுண்ட
சிற்சத்தி வெளியு மாகிச்
செறியுமொளி புரியவடி யேனுமுமை நம்பினேன்
றெளிவுதந் தாளு தற்கே
வார்த்தைதப் பாதநா வுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (இ)
நடையுடன் கிடையாகி நண்ணுமிரு வினையாகி
நடைபடிக டாமு மாகி
நடுவே முளைத்தநீ நானெனது மாகிவரு
நாட்டங்க டாமு மாகித்
தடையாகி வைத்ததடை யற்றவிடை யாகிநற்
றாரணைக டாமு மாகித்
தலைமையொடு நிலைமையும் வலுமைகளு மாகியெச்
சங்கதைக டானு மாகி
இடையாகி நடுவாகி நன்மைதீ மையுமாகி
யேகமுத லெவையு மாகி
இலகுமொளி புரியவடி யேனுமுமை நம்பினே
னிதமுரைத் தாளு தற்கே
மடமடென வடிநடன முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (சு)
மாயைமுத லாகியுயி ராகியற் புதமான
மன்னுயிர்க் குயிரு மாகி
வாருயிரு வினையாகி வினைதனக் கீடாகி
வாழ்பா முடம்பு மாகித்

ஆயறிவு கலையாகி நிலையாகி நிலையாத
தொந்தங்க டாமு மாகித்
துறவாகி மூவாசை யுறவாகி மறைவாகிச்
சோதிப்பிர காச மாகி
ஆயுமறை முடிவாகி யடியாகி நடுவாகி
ஆச்சரிய கூத்து மாகி
ஆடுமொளி புரியவடி யேனுமுமை நம்பினே
னன்புகூர்ந் தாளு தற்கே
வாயூறு தேனின்மொழி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (எ)

கண்ணுனை கண்ணேயெ னன்னமே யென்றழுவர்
கண்டகண் காட்சி யாகிக்
கவலைகுடி கொண்டுதட் டழியார்க ணன்மனக்
கண்ணுட்டி தானு மாகி
மண்ணுனை வஞ்சநெஞ் சத்தினர்க் கேற்றுது
மறைவுதரு புதைய லாகி
மதபேத மோதிமதி கெட்டவர்க் கெட்டாத
வான்கருணை வெள்ள; மாகி
எண்ணுத வெண்ணமெண் ணுநேரநித் துன்னுபே
ரின்பப் பெருக்கு மாகி
எய்துமொளி புரியவடி யேனுமுமை நம்பினே
னின்புதந் தாளு தற்கே
வண்ணத் திருக்கருணை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (அ)

வேதவே தாந்தமேல் வீடாகி நட்டநடு
வீட்டின் விளக்கு மாகி
வித்தக னிருக்குநவ மணிமாட மாகியொளி
விரிகதிர்ச் சுடரு மாகி
நாதகீ தம்பல முழக்கமிட் டோலமிடு
நாதநா தாந்த மாகி
நற்குணங் குடியா னெனப்பே ரெனக்கருளு
ஞானதிரு நாம மாகி
ஆதிமுத லந்தமுந் தானாகி விரிவா
யகண்டிதா கார மாகி
அவிருமொளி புரியவடி யேனுமுமை நம்பினே
னறிவுதந் தாளு தற்கே
மாதுய பாதமல ருள்ளநீர் பின்ஞெருடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (கூ)

கங்குல்பக லற்றவரு டங்குமெங் கெங்குநிறை
காரணக் கடவு ளாகிக்
கங்கறப் பொங்குகரு ணைக்கட லு மாகியென்
கரதலா மலக மாகி
சிங்கத்தை யொத்துவினை தன்னைச் செயங்கொண்ட
தேசிகன் றானு மாகித்
தேறுநீ ரக்குணங் குடிவாழ்க்கை யெற்குதவ
திவ்யகுண மேரு வாகி
எங்கே யிருக்கினு மங்குவந் துதவிதரு
மெங்கண்மகு மூது மாகி
இயைபுமொளி புரியவடி யேனுமுமை நம்பினே
னெளிதில்வந் தாளு தற்கே

மங்கள சவுந்தரிய முள்ளீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௧0)

ஆ௨ பாடல்-௧௧.

---

அருள்கூர்ந்த காட்சி யாகியு வுண்மையும்
பொருள்கூர்ந்து காண்போன் வேறெனப் பொருந்தா
தொன்று முறைமை யோதுக விவ்விடை
யின்றாக வருள்கவன் றிரங்கி யிரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

பாரீரோ வென்னையென் னன்னையே யென்முகம்
பார்த்தருள் பழுத்தி டீரோ
பாவிகன் னெஞ்சவஞ் சஞ்சிந்த வந்துமது
பாதத் திழுத்தி டீரோ
வாரீரோ வென்னெதிரில் வந்தெனக் கொருமுத்தம்
வாய்கொண் டளித்தி டீரோ
மகிழீரோ புகழீரோ கருணைகூர்ந் தெனையாள
வாவென் றழைத்தி டீரோ
சேரீரோ வென்னையுஞ் சேர்ந்தோர்க்கு முமதருட்
டேறற் றெளித்தி டீரோ
சிந்தைநொந் திடையுமடி யேனுமுமை நம்பினேன்
சித்தம்வைத் தாளு தற்கே
வாரோ மெனச்சொன்ன துள்ளீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௧)

எங்கட் குடிக்கரச ரேயுமது பாதமெற்
    கெய்தாத தென்ன குறையோ
என்றெய்வ முன்றெய்வ மென்றகுறை யோவல்ல
    திடிசாய மான குறையோ
பங்குகூ றிட்டகுறை யோபாவி வாழ்மனது
    பக்தியில் லாத குறையோ
பகலையி ரவென்றகுறை யோவீண் படர்ந்தறப்
    படுகில மான குறையோ
அங்குமிங் குங்கெட் டலைந்தகுறை யோதேடி
    யலையா திருந்த குறையோ
அறியாம லிடையுமடி யேனுமுமை நம்பினே
    னணைவுதந் தாளு தற்கே
வங்கமா யன்பாழி புள்ளநீர் பின்றொடர
    வள்ளலிற் குல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித் தீனே. (௨)

கல்லிலோ மண்ணிலோ விண்ணிலோ வடிமையிரு
    கண்ணிலோ கண்ணீ ரிலோ
கரையிலோ கடலிலோ வுடலிலோ வுயிரிலோ
    கதியான பூமி தனிலோ
அல்லிலோ பகலிலோ நல்லபத வில்லிலோ
    அறிவிலோ வுருமீ திலோ
அறிவிலோ வறிவொணு மறையிலோ மறைகண்முத
    லாகம புராணத் திலோ
செல்வமிகு திரைராச ரேதேவ ரீர்க்குநிலை
    திவ்விய குணங்கு டியிலோ
தெரியாம லிடையுமடி யேனுமுமை நம்பினேன்
    சேர்ந்தணைந் தாளு தற்கே

மல்லிகை மலர்க்கந்த முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணக் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௬)

ஓயாதோ வென்கவலை யுள்ளுருகி யானந்த
முள்ளுளே பாய்ந்தி டாதோ
ஒழியாதோ விழிமாயை யழியாதோ பாழாசை
யூழ்வினைக ளோய்ந்தி டாதோ
தீயாதோ வன்கருவி காயாதோ கரணங்க
ளவினைக ளர்ந்தி டாதோ
தேறுதோ பாழ்மனது சாராதோ பேரறிவு
திவ்யகுணம் வாய்ந்தி டாதோ
பேயாதோ வருண்மாரி வாயாதோ வான்கருணை
பேரின்ப சேர்ந்தி டாதோ
பெருகநின் றிடையுமடி யேனுமுமை நம்பினேன்
பிரியமுட னொரு தற்கே
வாயிற் சிறந்தமொழி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௭)

நாடுமோ முத்திவழி கூடுமோ நெற்றிவிழி
நல்லறிவு பந்தா டுமோ
நற்குணங் குடிமீது வீடுதர வென்றனையு
நாதனரு ளந்தே டுமோ
ஆடுமோ வட்டமா சித்தியும் புத்தியு
மந்தவழி யைச்சா டுமோ
ஆரவா ரத்தையும் போடுமோ சித்தமா
னந்தநட னம்மா டுமோ

மாடகூ டங்களெனு மனையாட்டி தருமாசை
மாட்டனென விட்டோ மோ
மனமூறித் திடையுமடி யேனுமுமை நம்பினேன்
வந்தணைந் தாளு தற்கே
வாடா மலர்க்குவிக ருள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ: ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௭)

ஆசாபு சாசவலை யுள்ளகப் படுவனோ
வல்லது வெளிப் படுவனோ
அகிலவாழ் வென்றிடு மாற்றில்வீழ்ந் திடுவனோ
வப்புற நடந்தி டுவனோ
காசாசை கொண்டுகதி கெட்டுநின் றிடுவனோ
கதியாசை கொண்டி டுவனோ
கரையற்ற கப்பலென் னக்கலங் கிடுவனோ
கரையேறி நின்றி டுவனோ
ஈசனடி செல்லா திருந்துசென் றிடுவனோ
வீசனடி சென்றி டுவனோ
எங்கியிக விடையுமடி யேனுமுமை நம்பினே
னேக்கமற வாழு தற்கே
மாசிலா மணிமாலை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (அ)

புதல்வரெனு முதலைகள் பிடித்துக் கடித்துப்
புசிக்கக் கொடுத்து ழல்வனோ
பொல்லாத காமக் கடற்புலா லென்னுமோர்
பூவகைப் பட்டு ழல்வனோ

கதகதென் றெரியும் பணைத்தீ மிதித்தெனது
கால்கொப்பு ளித்து ழல்வனோ
கட்டுபட் டாடைகள் ளொனுநமன் கைவலைக்
கட்டுண்டு நின்று ழல்வனோ
சதசதென் றழுகுதற் கந்தசாக் கடையான
சமுசார மதிலு ழல்வனோ
தத்தளித் திடையுமடி யேனுமுமை நம்பினேன்
சற்றுவர் தாரு தற்கே.
மதலைபோற் கொஞ்சுகுணை முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (எ)

வண்டாய்ப் பறந்தெழுந் திடுவனோ சிற்றின்ப
வாரியில் விழுந்திடு வனோ
மண்ணான காமக் குரோதமுண் டிடுவனோ
மாயைதனை வென்றி டுவனோ
பெண்டாசை யென்றபேய் கொண்டுசெத் திடுவனோ
பேரின்ப முற்றிடு வனோ
பீறற் றுருத்தியிற் பிரியமுற் றிடுவனோ
பிரியங்க ளற்றி டுவனோ
நண்டளந் திடுநாழி யாவனோ குறைவினிறை
நானுழி தானு வனோ
நாளெலா மிடையுமடி யேனுமுமை நம்பினே
னன்மைகூர்ந் தாரு தற்கே
மண்டுபே ரின்பவொளி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (அ)

என்னக யிருக்கநா னென்வசப் படுவனோ
வென்னமோ சப்ப டுவனோ
இரவுபக லற்றவனு பூதிதனி லுறைவனோ
விதமகித மதிலு றைவனோ
தன்னைமதி யாதுமதி கேடுகெட் டிடுவனோ
தன்னையு மதித்தி டுவனோ
தாராள மாகவூரு ணையமுண் டிடுவனோ
தட்டுமருள் கொண்டி டுவனோ
என்னதான் செய்வதினி யென்றுமேங் கிடுவனோ
வேகாந்த மோங்கி டுவனோ
இப்படிக் கிடையுமடி யேனுமுமை நம்பினே
னிஷ்டம்வைத் தாளு தற்கே
மன்னுதவ முத்திநிலை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற குல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
கோலுமன் னரசர்கைக் கோலாவ னோபாவி
குருடர்கைக் கோலா வனோ
கூலாயி லாகஇல் லல்லாகு வென்பனோ
குடிகெட்ட நிலையுண் பனோ
வேலையது வாய்முகம் மதுறசூ லென்பனோ
வேலையிது தானென் பனோ
வேதவே தாந்தமெய்ஞ் ஞானவீ டடைவனோ
வெறுவெளியி னின்றி டுவனோ
ஆலா விருக்ஷமென மேலாவ னோவுதி
ரதன்சருகு போலா வனோ
ஆறுதுயி டையுமடி யேனுமுமை நம்பினே
னுதரித் தாளு தற்கே

மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

மாலார்க்கு வாலாய முள்ளகீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணக் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௯௦)

ஆ-பாடல் - ௬௪.

---

ஒன்றுஞ் சமாதி யோகமிம் முறையா
மென்றருள் பிரானே யிவற்றியல் பெல்லா
மெவற்றுனு மசையா திசையப் படுத்தித்
தவத்தகை யருள்கெனச் சரண்புகுந் திரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

பாயுமீ ராறுகலை பாயாது பக்குவம்
பண்ணிவைப் பதுச மாதி
பழவினை யிறக்கவுஞ் சுழுமுனை திறக்கவும்
பழகிவரு வதுச மாதி
ஓயாத கருவிகர ணாதியோய்ந் தொழியவிழி
யொளிகொழிப் பதுச மாதி
ஒன்றிரண் டென்றுமன முற்றுமுள றுதலைவிட்
டொன்றுபடு வதுச மாதி
ஈயெறும் பாதிக டமக்குடல் குழைந்துமு
னின்புருகு வதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே
வாயுவினு மதிவேக முள்ளகீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.

நாவினுனி தனைமடித் தங்காள மோட்டிசிலை
நாட்டிவைப் பதுச மாதி
நாவிரண் டெட்டுமெட் டெட்டாகி யழியமுன்
னுலாக்கு வதுச மாதி
ஓவியம் போலிருந் துள்ளுருகு நல்லமிர்த
மொழுகவுண் பதுச மாதி
உச்சிவெளி சென்றுமொளி கண்டிமிரு விழியையு
முட்குவிப் பதுச மாதி
எவமொடு விலகலெனு மிருவினையு மற்றசை
விலாதிருப் பதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே
மாவேக மனவேக முள்ளநீர் பின்றொடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (உ)
இதயங் களித்துவரு வதையுங் கொளுத்திவெளி
யேறிவிடு வதுச மாதி
எட்டியெட் டாப்பொருளை யெட்டிப் பிடிக்கவடி
யெட்டிவைப் பதுச மாதி
பதியினதி பதியைவைத் ததிகதுதி யோதிப்
பதம்பணிகு வதுச மாதி
பரிபூர ணந்தனில் வருகார ணந்தனைப்
பார்த்துமகிழ் வதுச மாதி
எதுவந்து நேரினும் மாறினு மிரண்டுமொன்
றென்றிருப் பதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே

மதயானை போற்றீர முள்ளகீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௩)

வேரற்ற சுத்தபரி பூரணப் பேரின்ப
வீடுபுகு வதுச மாதி
விரிகருணை தந்தகுரு நாதனடி யார்களெனு
வேடமணி வதுச மாதி
போராடு மையற் குதக்கைக் கடந்தப்
புறத்தினிற் பதுச மாதி
புகன்மறைப் பொருளைமற வாக்கட னமக்கென்று
புந்திமகிழ் வதுச மாதி
ஈராறு கால்களையு மெட்டுக் கயிற்று
விறுக்கியறி வதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை ஈம்பினே
னிதுவேளை யாளு தற்கே
மார்பணியு முத்தார முள்ளகீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௪)

சாதிபே தத்தையும் மாதர்போ கத்தையுந்
தள்ளிநிற் பதுச மாதி
சந்ததமு மொளிருமருண் ஞானவரு டேசிகன்
றன்னையறி வதுச மாதி
தீதிலருள் கொண்டதே சோமயத் துன்மனஞ்
சேர்ந்திருப்ப பதுச மாதி
செத்தசவ மதுபோ லிருந்துசெப தபமுஞ்
செயத்தனிப் பதுச மாதி

வதுமது வானகுரு நாதனிரு பாதமதி
விச்சைவைப் பதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே
மாதவர்க ளுக்குதவி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
நிதியாசை யற்றுதற வதியாசை யுற்றுநன்
னிட்டைபுரி வதுச மாதி
நிலையாது காயமென் றெண்ணமொன் றென்றென்று
நிச்சயிப் பதுச மாதி
வதியுஞ்சவ் வாதுசந் தனமுமொன் றென்றுமனம்
வைத்துநிகழ் வதுச மாதி
வாராது வாராது வருவனவும் வருமென்று
வாட்டமொழி வதுச மாதி
இதமகித மற்றமதி பெற்றிதய முத்திநிலை
யேற்றுநிற் பதுச மாதி
என்றருட் பிரானே யடியேனு முமைநம்பினே
னிதுவேளை யாளு தற்கே
மதுரவின் பப்பெருக் குள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
எல்லையு மறந்துபல தொல்லையு மிறந்தோ
ரிடத்திருப் பதுச மாதி
எனதியா னென்பதை யிடம்பொருளோ டேவன்முத
லிடழிப் பதுச மாதி

அல்லுபக லாகவெல் லும்மனவு நல்லறிஞ
ரடிபணிகு வதுச மாதி
ஆகமத் தின்படிச் சாதிக்க முதலெல்லையு
மற்றிருப் பதுச மாதி
இல்லாளு மைந்தருஞ் சுற்றமுஞ் சுற்றமா
யில்லையென் பதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே
மல்லாடி னும்பொறுமை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (எ)

சலனசஞ் சலமது தொலைத்தருண் மலைப்புடையில்
சார்ந்திருப் பதுச மாதி
சர்வபரி பூரண வகண்டிதா காரமே
சாட்சியென் பது சமாதி
நிலையம்விட் டலையாது நீவாத தீபமென
நிலையினிற் பதுச மாதி
நெற்றிவிழி ரண்டையு மொத்துநடு கொண்டொளியி
னேரில்லைப் பதுச மாதி
இலகுஞ் சதாகால நிட்டைபல் குக்குறவி
லெய்திநிற் பதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே
மலைபோற் பெரும்பெருமை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (அ)

ஆரிருந் தென்னவார் போயென்ன வென்றுமன
 மற்றிருப் பதுச மாதி
ஆராலு மறியாத சூதான வெளிசென்
 றடைந்துபோ வதுச மாதி
வீரசூ ரங்கள்முத லதிகப்பிர சங்கமு
 மெலியமெலி வதுச மாதி
வேதவே தாந்தமும் விட்டோ தாந்தநடு
 வீடுசெல் வதுச மாதி
எருறு மயிர்ப்பால மேறுமன மேயேறு
 மேறுமென் பதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
 னிதுவேளை யாளு தற்கே
வாரிபோல் வான்கருணை யுள்ளநீர் பின்ரொடர
 வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
 மணியே முகியித் தீனே. (க)
ஆழியென வருள்பொங்கு மாசையுற் றழுதழு
 தகங்களிப் பதுச மாதி
அதிசுகம் பெருவாரி யமிர்தமுண் டுண்டுதகை
 யாறிசிற் பதுச மாதி
பாழினிலே யற்றுமுப் பாழினிலே பெற்றுப்
 பதைப்பொழிப் பதுச மாதி
பலகோடி யண்டபகி ரண்டமுந் தன்னுளே
 பார்த்திருப் பதுச மாதி
ஏழுபுவ னத்தையுஞ் சுற்றியுஞ் சுற்று
 திருப்பிருப் பதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
 னிதுவேளை யாளு தற்கே

வாழிமகு மூதினரு ளுள்ளநீர் பின்றொடர
  வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித் தினே. (௧௦)

ஆ பாடல் - ௯௪.

---

காந்தமு மயமுங் கலந்தெனக் கலந்து
மாய்ந்த வுளத்தை மாயா தாகப்
போய்ந்திடை மூளைக்கும் புதுமைக ளெல்லார்
தேய்ந்தற வருள்கெனச் சிந்தித் திரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

குவலயக் கவலைதரு மிருமடையர் கைகளைக்
  கோத்துத் திரிந்த வம்பன்
கோட்டியுங் கேட்டையுஞ் சேட்டையுங் கூட்டியொரு
  கோட்டையாய்க் கட்டு வம்பன்
தவிராத காயசுற் பங்கொள்கி றேனினிச்
  சாவனோ வென்ற வம்பன்
சந்யாச மென்றபொய் வேடந் தரித்தவர்க
  டம்மைநிகர் சொன்ன வம்பன்
செபமாலை கைக்கொண்டு வாய்முணு முணுத்துமுப
  தேசிநா னென்ற வம்பன்
நீதெலாந் திரவடி யேனுமுமை நம்பினேன்
  நீரவந் தாளு தற்கே
மௌனமெனு மோனவடி வுள்ளநீர் பின்றொடர
  வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித் தினே. (௧)

நெறியற்ற வம்பனல் லறிவற்ற வம்பனெதிர்
    நிகரற்ற கொடிய வம்பன்
நிறையற்ற வம்பன்வரன் முறையற்ற வம்பன்வன்
    னெஞ்சனஞ் சாத வம்பன்
குறியற்ற வம்பனொரு சரியற்ற வம்பன்
    குணக்கேட னான வம்பன்
கொடியரிற் சகிசண்டி யானவம் பன்கெட்ட
    கொலைபாவி யான வம்பன்
உறவற்ற வம்பன்மிகு வெறிபெற்ற வம்பனே
    னூர்க்குமா காத வம்பன்
உமதுபத மறியவடி யேனுமுமை நம்பினே
    னுளமகிழ்ந் தாளு தற்கே
மறுகவலை யுறினுமுற வுள்ளநீர் பின்றொடர
    வள்ளலிற வுல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித் தீனே.
கல்லாத வம்பனறி வில்லாத வம்பனொரு
    காசும் பெறாத வம்பன்
கடுவாயி னுங்கொடிய வம்பன் வெருட்டிக்
    கடிக்குநா யான வம்பன்
பொல்லாத வம்பனுற வில்லாத வம்பன்
    பொறாமையே கொண்ட வம்பன்
புன்மைகுடி கொண்டகெச போக்கிலிகள் சறுதாறு
    போலுமுன் னேறு வம்பன்
மல்லாடு வம்பனசை பல்லாடு வம்பனிரு
    மடையர்நடை யுடைய வம்பன்
வம்பெலா மகலவடி யேனுமுமை நம்பினேன்
    மரபுதந் தாளு தற்கே

வல்லாண்மை யில்லாமை யுள்ளீர் பின்ருடா
　　வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
　　மணியே முகியித் தீனே. (ஒ)

அதிகப்பிர சங்கமே குடிகொண்ட வம்பனன்
　　பணுவுமில் லாத வம்பன்
அச்சமில் லாதவம் பன்றிட்டு நிட்டூர
　　வநியாய கார வம்பன்
கெதிகெட் டுருட்டுவம் பன்றிருட் டெருமைக்
　　கிடாவினு முரட்டு வம்பன்
கெண்டர்க்கு வண்டர்க்கு மிண்டவம்பன் சண்டைக்
　　கெக்கரிக் கொட்டு வம்பன்
விதிகெட்ட வம்பனிலை பதிவிட் டலைந்தலை
　　விரிகோல மான வம்பன்
விடமெலா மொழியவடி யேனுமுமை நம்பினேன்
　　விரைவில்வந் தாளு தற்கே
வதலாள் விடாமலென யுள்ளீர் பின்ருடா
　　வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
　　மணியே முகியித் தீனே. (ச)

சதியா யிரஞ்செய்த வம்பனல் விதமகித
　　சகசமறி யாத வம்பன்
றந்தைதாய் தன்மனதை நோவித்த வம்பன்
　　றராதரங் கெட்ட வம்பன்
பதிஞயி ரந்தரஞ் சொல்லினுஞ் செவியுட்
　　படாதபிடி வாத வம்பன்
பாரவான் முதலான பேருமென் பேரையும்
　　பகரப் பயந்த வம்பன்

நிதிதேடு சீவச் சவங்கள் பட்சங்களே
நேசித்த தோஷி வம்பன்
நெரடெலாம் வெருளவடி யேனுமுமை நம்பினே
னேயம்வைத் தாளு தற்கே
மதிதனிலு மதிகவொளி யுள்ளநீர் பின்ஞெடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
என்சா ணுடம்புமொரு போதுமழி யாதென்ற
வெண்ணமொழி யாத வம்பன்
ஏதுவத் தாலுமோ ரணுவிற்கு நிகரென்
றிடும்பைகள் பேசு வம்பன்
கண்சாடை கண்டுவில காதவம் பன்காசு
காசுகா சென்ற வம்பன்
கல்லுமொரு போதேனு முருகுமுரு காக்கருங்
கன்னெஞ்ச ஞன வம்பன்
பெண்சாதி பெண்சாதி பெண்சாதி யென்றே
பிதற்றுபேய் கொண்ட வம்பன்
பேயாட் டொழிக்கவடி யேனுமுமை நம்பினேன்
பிரியமுட ஞளு தற்கே
வண்சீரு மெண்சீரு முள்ளநீர் பின்ஞெடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
அஞ்சாத வத்தொழி றனைப்புரியும் வம்பன்மா
வதிகாரி யான வம்பன்
ஆதரிக் கின்ற பேர்களைத் தானே
யடித்துக் கெடுத்த வம்பன்

பஞ்சமா பாதகம் முதலான தீதகம்
　　பயமறச் செய்த வம்பன்
பட்சம்வைத் தோர்தமக் கிச்சைமிக வோதிப்
　　பணம்பறிக் கின்ற வம்பன்
நஞ்செலா மொன்ருய்த் திரண்டுரு வெடுத்தகெடு
　　நாசச் சரீர வம்பன்
நாயினுங் கொடியவடி யேனுமுமை நம்பினே
　　னூட்டம்வைத் தாளு தற்கே
வஞ்சநம னுக்குநஞ் சுள்ளநீர் பின்ரொடர
　　வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
　　மணியே முகியித் தீனே. (எ)

தையலர்க ளாசையெனு மையலில் விடாய்கொண்டு
　　தாகித் தலைந்த வம்பன்
சாகா வரம்பெற்ற தேகத்த னென்று
　　தலைகெட்டு நின்ற வம்பன்
மெய்யாக வையகத் தாரெனக் கீடென்று
　　வீண்மதம் பேசு வம்பன்
வெறிகொண்ட நாய்போலும் வள்ளுவ னென்றறியார்
　　மேலும்விழு கின்ற வம்பன்
செய்யாத செய்கையே செய்தவம் பன்பொய்த்த
　　சிற்றின்ப முற்ற வம்பன்
தீயும் பயந்தவடி யேனுமுமை நம்பினேன்
　　சித்தம்வைத் தாளு தற்கே
வையமுழு துக்குமணே வுள்ளநீர் பின்ரொடர
　　வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
　　மணியே முகியித் தீனே. (அ)

கேடெலாங் கூடித் திரண்டுருக் கொண்டுகுடி
 கேடு டெலடுத்த வம்பன்
கேட்டபேர் கண்டபேர் காதுகண் ணுடுவெடுக்
 கின்றவடி யுண்ட வம்பன்
நாடெலா மிவனையு நாட லாமோவென்று
 நகையாட லுண்ட வம்பன்
நாடோறு மாடுபோ டோடியோடித் தின்று
 நாவுருசி கண்ட வமபன்
மேடுமுட் டத்துருத் திக்குட் பருக்கைமிக
 வெட்டியே வீசு வம்பன்
மெத்தவம் புற்றதடி யேனுமுமை நம்பினேன்
 மேன்மைதந் தாளு தற்கே
மாடம்ப ஜம்பநடை யுள்ளநீர் பின்னொருடா
 வள்ளவிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
 மணியே முகியித் தீனே.

தாயாதி முதலன்னை சுற்றங்க டம்மையுஞ்
 சாரா தடித்த வம்பன்
தானதரு மங்களுக் கீனதரு மங்களே
 சாட்டிக் கொடுத்த வம்பன்
பேயாய்ப் பிடித்துவெறி நாயாய்க் கடித்துப்
 பிடாரிபோ லலையும் வம்பன்
பீருநா னென்னுமுப தேசங்கள் கூறிவிலை
 பேசித் திரிந்த வம்பன்
ஆயமகு மூதுநபி பாதமல ரைச்சென்னி
 சூட்டறிவின் மோட்டு வம்பன்
அறவெய்த லெய்தவடி யேனுமுமை நம்பினேன்
 சொன்னபடி யாளு தற்கே

மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

மாயோக சித்திநெறி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.

ஷ பாடல்-௭௮.

---

பொருளிற்கு வேறுப் பேரந்தா னென்று
மருளேயு ளத்தை மறைக்கும் பவத்தி
னியங்கா தலவா தெங்குமில் லாது
வயங்கா தகற்றுக வள்ளலென் றிரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

வேதாந்த சாரமே சாரமென் றறியாது
வீணு டொலைத்த பாவி
மேன்மேலு மெய்ஞ்ஞான வின்பமனு காதபாழ்
மெய்யைமெய் யென்ற பாவி
சோதிப்பிர காசச் சுயஞ்சோதி யணுகத்
தொழுந்துறைக ளற்ற பாவி
சுகநிட்டை பாராத விழியெனு முகத்திலிரு
தொள்ளையொ டிருந்த பாவி
கோதிலும தடிபணிகி லாதசிர சென்றகற்
குன்றைச் சுமந்த பாவி
கொடியமா பாவியடி யேனுமுமை நம்பினேன்
குடியிருந் தாளு தற்கே
மாதவ வபேதமிலை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.

மட்டிகளி லுங்கெட்ட சுட்டிவால் வெட்டிபேய்
மட்டைரட் டித்த பாவி
வஞ்சநம னுக்குவா ரிக்கொடுத் திடவுடலை
வளமாய் வளர்த்த பாவி
சட்டிவைத் துச்சட்டி வாங்கும் பெருந்தொப்பை
சற்றும்வடி யாத பாவி
சண்டாள ருக்குமா சண்டாள ருக்குமா
சண்டாள னான பாவி
பொட்டையிபி லீசுகைக் குட்பட்ட பாவியொரு
போக்குநீக் கற்ற பாவி
போகாத பாவியடி யேனுமுமை நம்பினேன்
பொய்ம்மைதீர்த் தாளு தற்கே
வட்டமதி வெட்குமுக முள்ளநீர் பின்னொருடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
நாசச் சரீரத்தை நானெ னெனக்குளறு
நாசம் பிடித்த பாவி
நானு விதங்கட்கு மேலான பாவியா
னற்றவமு மற்ற பாவி
கூசாத பாவியாய் பேசாத பாவிமா
கோபம் படைத்த பாவி
கொலைபாவி கொலைபாவி கொலைபாவி கோடானு
கோடிகொலை செய்த பாவி
வேசியர்க ளாசைவினை யகலாத பாவிதீ
வினையுமக லாத பாவி
வீணான பாவியடி யேனுமுமை நம்பினேன்
மெய்ம்மைதந் தாளு தற்கே

வாசாமகோசரத் துள்ளநீர் பின்றொட
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் நீனே. (௬)

பிரியாத பேரின்ப வனுபூதி யாசைப்
பிறப்புமறி யாத பாவி
பிரபஞ்ச வுறவையொரு சம்மந்தி னோர்கட்
பின்சென்றி டாத பாவி
அருமையா யறிகுறிக ளத்தனையு மெத்திநல்
லறிகுறிக ளற்ற பாவி
அந்தகா ரத்தையே புத்திபுட் கொண்டிவெறு
மஞ்ஞானி யான பாவி
நரசென்ம மாகியு நரர்க்குணங் களவினு
நாடியறி யாத பாவி
நலமற்ற பாவியடி யேனுமுமை நம்பினே
னன்புதந் தாளு தற்கே
வருகவலை யேகவழி யுள்ளநீர் பின்றொட
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் நீனே. (௭)

தேகாதி யகிலப்பிர பஞ்சமது பொய்யென்று
தேர்ந்தறிவி லாத பாவி
தீபாவி தீபாவி தீபாவி தீபாவி
திவ்வியகுண மற்ற பாவி
மாகவலை குடிகொண்ட பாவிவம் பாகவே
வாதாடு கின்ற பாவி
மாயப் பசாசுகொண் டலைபாவி வீணாக
வாழ்நா ளழித்த பாவி

ஆகாத பாவியா னாகாத பாவியா
        னார்க்குமா காத பாவி
அளவற்ற பாவியடி யேனுமுமை நம்பினே
        னண்டஃணைத் தாளு தற்கே
வாருவழி யேகவொளி யுள்ளநீர் பின்ளுேடர
        வள்ளவிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
        மணியே முகியித் தினே.
மெய்யான பொய்யுடஃல மெய்யென்று மெய்யான
        மெய்யறிவு கெட்ட பாவி
மெய்யான மெய்யேது மறியாத பொய்யான
        மெய்யைப் படைத்த பாவி
பொய்யான தையலரை யையோ வணைக்கசுக
        போகமோ கித்த பாவி
பொய்யான புஃலயான கொஃலயான மஃலயான
        பொய்த்தமொழி கற்ற பாவி
வையாத வையாசை யானதீ யானமா
        மாயைகுடி கொண்ட பாவி
மாகொடும் பாவியடி யேனுமுமை நம்பினேன்
        வந்திருந் தாளு தற்கே
வையவிழி மையவொளி யுள்ளநீர் பின்ளுேடர
        வள்ளவிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
        மணியே முகியித் தினே.
பசுபாச வாசவிஃன யென்றவெறி கொண்டஃல
        பசாசாடு கின்ற பாவி
பால்பழங் கற்கண்டு சர்க்கரைகண் மொக்கியும்
        பட்டமர மான பாவி

விசனமொடு துக்கமே குடிகொண்ட பாவிபொய்
வேடந் தரித்த பாவி
வித்தகன் றிருவடி தனைத்தொழுது தொழுதழுது
மெய்யருளுரு பாவி
நிசமாக வசைபேசு வார்கள்வாய் தன்னிலே
நிதமா யிருந்த பாவி
நிலையற்ற பாவியடி யேனுமுமை நம்பினேனி
னேயம்வைத் தாளு தற்கே
வசியமன வாசிவச முள்ளநீர் பின்ரொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௭)

இதமகித மென்றவினை யுங்கொண் டலைந்துசிற்
றின்பம்வேம் புண்ட பாவி
எண்சா ணுடம்புமெவ றுஞ்சான பாவியோ
ரின்பமணை யாத பாவி
பதமற்ற பாவிக் கிறதயு தலைமொட்டை
பரதேசி யான பாவி
பாவிப் பிணங்களைப் பாடித் துதித்துப்
பணம்பறிக் கின்ற பாவி
சதிகெடும் பாழாக்கு மதிகொடும் பாவிபொய்ச்
சத்தியஞ் செய்த பாவி
சர்ப்பநிகர் பாவியடி யேனுமுமை நம்பினேன்
சாரிவந் தாளு தற்கே
மதினமுத லும்வாச முள்ளநீர் பின்ரொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௮)

கைக்குள்வெண் ணெயைவைத்து நெய்க்கழுத பாவிகலை
கற்றுமறி வற்ற பாவி
கற்பக விருக்ஷத்தி னடியிலே காஞ்சிரங்
காய்தேடி நின்ற பாவி
கொக்குப் பிடிக்கநாய்க் குத்தெரியு மோவென்ற
கொள்கைகுடி கொண்ட பாவி
குருடர்களி யானையைக் கண்டகதை போலசற்
குருவையறி யாத பாவி
சர்க்கரை கரும்புகற் கண்டமு திருக்கக்
கசங்குடிக் கின்ற பாவி
தலைகெட்ட பாவியடி யேனுமுமை நம்பினேன்
றயையைவைத் தாளு தற்கே
மக்கநக ருக்குமணை முள்ளநீர் பின்னொரு டா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
குரைஷிக் குலக்கொழுந் தானமகு மூதுநபி
கொள்கையறி யாத பாவி
கொறடாத் தனைக்கொண்டு மாட்டினு மறிஞர்பின்
கூடிநட வாத பாவி
அரிசிவிலை புலையறியு மோவென்ற கதைபோல
வகலிற் படைத்த பாவி
ஆருக்கு வைத்தகூ மாயினுஞ் சரிகாணி
லவ்வியடை கின்ற பாவி
விரிதருந் தொப்பையை விருப்பொடு வளர்க்கமேன்
மேலுமலை கின்ற பாவி
விதியற்ற பாவியடி யேனுமுமை நம்பினேன்
வேளையீ தாளு தற்கே

வரிசைதபி வரிசையிக வுள்ளீர் பின்றொடர
வள்ளலிற ரூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (க0)

ஆ பாடல்-அச.

இதற்குமுன் சொன்ன விடைபூ றிரண்டினுற்
பதைப்பற் றிராத பாவியுள் ளத்திறுக்
கென்செய்வ னெனன் றிடைத்திடைந் தழுகுதை
யின்செய்கை யாலொழித் திடுகவென் றிரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

கனமாயை வினையென்ற சனியன் பிடித்துக்
கலங்கித் தவித்த ழுவனோ
காலூன்றி மழைபொழிய வுங்கருணை முகில்வினங்
கவியவிலை யென்ற ழுவனோ
அனியாய மனியாய மனியாய மென்கொடுமை
யனியாய மென்ற ழுவனோ
ஆனாலு மென்போலு மொருபாவி யகிலமதி
லாருளா ரென்ற ழுவனோ
இனியாள்வ ரெவரைய னேயைய னேயென்ன
வேங்கித் துடித்த ழுவனோ
இங்கென்ன செய்வனடி யேனுமமை நம்பினே
னிஷ்டம்வைத் தாளு தற்கே
மனமாயை யற்றமன முள்ளீர் பின்றொடர
வள்ளலிற ரூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (க)

தந்தைதாய் முதலான பந்தங்க ளென்றனைச்
சதிசெய்த தற்க ழுவனே
சாதிவரை தள்ளியே சஞ்சரிக் காமெய்த்
தவக்குறை தனக்க ழுவனே
புந்திமகி ழுண்டுண் டுடுத்துசிற் றின்பவனு
போகந் தனக்க ழுவனே
புனிதனா ஹ்ருதயம் பெருவெள்ள மென்றுதான்
பொங்குமோ வென்றி ழுவனே
எந்தவித மாயினு மிணங்கவில்லை யென்மன
மிணங்கவில்லை யென்ற ழுவனே
என்செய்வ னேழையடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே
வந்துகுதி கொள்ளுநடை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
மாயாத வோயாவி காரத்தினா லெனது
மனதுநொந் தேய ழுவனே
வஞ்சப்பிர பஞ்சத்தை நெஞ்சத் திருத்தியே
மதிகெட்டு நின்ற ழுவனே
தீயனிவ னென்றேசு கின்றவர் நகைக்கின்ற
தீவினை தனக்க ழுவனே
சீநாயே வோடென் றடித்துத் துரத்துஞ்
சிரிப்பினைப் பட்ட ழுவனே
நாயினுங் கடைகெட்ட நாயினுங் கடைகெட்ட
நாய்போ லலைந்த ழுவனே
நானென்ன செய்வனடி யேனுமுமை நம்பினே
னன்மைகூர்ந் தாளு தற்கே

வாயாத மாயைசா லுள்ளநீர் பின்றொடரா
　　வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
　　மணியே முகியித் தீனே. (௫)
பாசக் கயிற்றுவலை வீசிப் பிடிக்கின்ற
　　பாவையர்க் கேய மூவனோ
பத்தியொடு தந்தைதாய் தந்துமோ சஞ்செய்த
　　பல்வினை தனக்க மூவனோ
ஆசைப் பெருக்கைப் பெருக்கப் பெருக்கமும்
　　பாளருக் கேய மூவனோ
அம்மம்ம வென்சொல்லு கேனகில வாழ்வென்னு
　　மக்கினிகள் சுட்ட மூவனோ
பீசேறு பீறற் றுருத்திசத மென்றதைப்
　　பேணுதற் கேய மூவனோ
பேயனென் செய்வனடி யேனுமுனை நம்பினேன்
　　பிழைபொறுத் தாளு தற்கே
மாசிலுப தேசநிலை யுள்ளநீர் பின்றொடரா
　　வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
　　மணியே முகியித் தீனே. (௬)
எமனைப் பழித்தமட வாரல்கு லென்றபா
　　ழிடிகிணறு வீழ்ந்த மூவனோ
இருகொங்கை யென்றதேன் கொட்டிமண் டைக்கேறி
　　யெரியுதே யென்ற மூவனோ
நிமையா விழிக்கணை தொடுத்துத் துளைக்கவென்
　　னெஞ்சந் துடித்த மூவனோ
நெகிழுங் குழன்மயிர்க் கண்ணியிற் சிக்கியதை
　　நீக்கமுடி யாத மூவனோ

தமியனே னென்செய்வ னென்செய்வ னென்றுபிர
லாபித்து நின்ற ழுவனோ
தந்தையே சொந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தற்கே
மமதையில்லாச் சுகுண முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
ஆனந்த மானபர மானந்த மாகா
தவத்தையை நினைந்த ழுவனோ
அகிலமுத லானபா ழாசைமா ளாதவனி
யாயந் தனக்க ழுவனோ
ஈனப் பெருங்காய மென்னதென் பதிலரு
வேக்கந் தனக்க ழுவனோ
எனதாவி யுட்பொருளை வந்துகைக் கொள்வதினி
யென்றெண்ணி நின்ற ழுவனோ
கானலை நிகர்த்தமெய் மெய்யென்ற பொய்தனைக்
கருதுவெறி கொண்ட ழுவனோ
சுன்பியென் செய்வனடி யேனுமுமை நம்பினேன்
கரையேற்றி யாளு தற்கே
வாளுதி பூதமதி லுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
கட்டிப் பிடிக்கினுங் கைக்கடங் காமனங்
கவிவதிலை யென்ற ழுவனோ
கருவிகர ணம்பாய்கு வதுகண்டு கண்கலக்
கங்கொண்டு நின்ற ழுவனோ

வெட்டவெளி தன்னிலே விட்டகங் காரமென
　　மேவிட்ட தற்க ழுவனோ
மெய்யாகி நானென்னு நானா னெனக்குளறும்
　　வெட்கந் தனக்க ழுவனோ
எட்டிரண் டறியாத மூடனா யிருவினைக்
　　கீடாகி நின்ற ழுவனோ
என்னதான் செய்வனடி யேனுமுமை நம்பினே
　　னிஷ்டம்வைத் தானா தற்கே
மட்டினா நிஷ்டைநடு வுள்ளநீர் பின்றொடர
　　வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
　　மணியே முகியித் தீனே.　　(எ)

நீராழு மாகவென் னெஞ்சுருகி நன்னிலையி
　　னிற்கவில்லை யென்ற ழுவனோ
நிஷ்டைக்கு மெட்டாத பேரொளி தியானித்தி
　　னோர்படவி லென்ற ழுவனோ
காராவ நந்தங்கள் போலருள்க விந்திடக்
　　காண்கிலே னென்ற ழுவனோ
கடவுளைத் தேடியிரு கண்ணீர் ததும்பிக்
　　கரஞ்சென்னி வைத்த ழுவனோ
மாரிபோற் பேரின்ப மழைபொழிய விலையென்ற
　　வாய்விட் டிறைந்த ழுவனோ
மனமைந் திடைந்தவடி யேனுமுமை நம்பினேன்
　　வாழ்வுதந் தானா தற்கே
வாராதி ராதவரு முள்ளநீர் பின்றொடர
　　வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
　　மணியே முகியித் தீனே.　　(அ)

கட்டழகி தன்னையென் கண்ணிலுங் காண்கிலேன்
காண்கிலே னென்ற ழுவனே
கண்மாரி விண்மாரி போற்பொழிய வழுவனே
கைதலையில் வைத்த ழுவனே
கொட்டாவி விட்டுவிட் டேங்கியேங் கிக்கொண்டு
குந்தியுட் காந்த ழுவனே
குட்டிச் சுவர்க்தனிற் போயிருந் தையையோ
கோவென் றிறைந்த ழுவனே
எட்டாத கொம்பினி லிருக்கின்ற தேனே
யிறங்கிடா யென்ற ழுவனே
ஏதென்று சொல்வனடி யேனுமுமை நம்பினே
னிச்சையுட னாரு தற்கே
வட்டமிடு முகில்கவிகை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
என்னசெய் யப்போ கிறேனென்று பாவிதா
னிரவுபக லாய ழுவனே
ஏமசா மம்மென்றி லாதுதேம் பித்தேம்பி
யெரிமூச் செறிந்த ழுவனே
கன்னலமு தேசீனி கற்கண்டு சர்க்கரைக்
கட்டியே யென்ற ழுவனே
கண்ணாட்டி யானவென் கண்மணியை யென்றுதான்
காண்பனோ வென்ற ழுவனே
நன்னேய ராயமகு மூதுபத நம்பியு
நாளுமிக நொந்த ழுவனே
நைந்தழுது நொந்தவடி யேனுமுமை நம்பினே
னன்புகொண் டாளு தற்கே

மன்னுமதி தனினுமொளி யுள்ளநீர் பின்ெறுடர
 வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
 மணியே முகியித் தீனே. (க0)

ஆ பாடல் - கச.

இறந்தொழி தற்கே யியங்கிய தன்மையின்
மறைந்தொழி யாது மாறு யிருப்ப
தொன்றுவ தென்றே வொன்றமேறுன் றும
னின்றிடற் கருள்கென நின்றழு திரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

ஞானகுரு நாதனற் பதநிதந் தொழுதழுது
 நாடுவது மெக்கா லமோ
நான்மறை தனக்குமெட் டாதநா லாம்படியி
 ளுனேற லெக்கா லமோ
ஊனேடிருந்தவுற வற்றமுற வுற்றுவீ
 டீட்புகுவ தெக்கா லமோ
ஒப்புவமை செப்பரிய கர்ப்பூர தீபமென
 வொன்றுவ தெக்கா லமோ
தானே யெனைப்பெற்ற மானே வருந்தியரு
 டருவதினி யெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
 சமயமீ தாளு தற்கே
வானமெல் லாமகிமை யுள்ளநீர் பின்ெறுடர
 வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
 மணியே முகியித் தீனே. (க)

வேடிக்கை யும்பகட் டும்பிலுக் குஞ்சொகுசும்
விட்டொழிவ தெக்கா லமோ
வீணிரக் கங்களு மூணுறக் கங்களும்
வேரறுவ தெக்கா லமோ
தாடிமீ சைகளைத் துந்துவ மிலாருறவு
சையென்ப தெக்கா லமோ
சண்டைநின் றிடுவதும் மண்டைபிண் டுடைவதும்
சள்ளென்ப தெக்கா லமோ
சாடாது சமநிலையி னின்றுசம ரசமீது
சாடூர்வ தெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தற்கே
வாடிக்கை யாய்க்கருணை யுள்ளநீர் பின்றொடர
வள்ளவிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
சொல்லரிய சுகவாரி யமிழ்துண் டொடுங்கித்
துடிப்பொழிவ தெக்கா லமோ
சுந்தரச் சோதிமணி மாலையணி மார்பனைத்
தொழுவதினி யெக்கா லமோ
நல்லநட னம்புரிந் தாடுகரு ணாகர
னடம்புரிவ தெக்கா லமோ
நாடிவலு வாகப் பிடித்திழுத் தென்றனையு
நடியென்ப தெக்கா லமோ
சல்லிக் குணங்கெட்ட புல்லர்களை விட்டுத்
தனிப்பதினி யெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தற்கே

வல்லிருளை வெல்லுமொளி யுள்ளநீர் பின்ளுெடர
    வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித் தீனே. (௩)

நயமே யுறைந்தறிவின் மயமே நிறைந்தபொரு
    ஞனணைவ தெக்கா லமோ
நல்லறிஞர் பின்சாடி யில்லுறவு பிஞ்சேரூட
    நாள்வருவ தெக்கா லமோ
பயமே குறைந்தவிரு தயமே செறிந்தவினை
    பாழாவ தெக்கா லமோ
பாடைதனி லேறுமு ஞெளித்தோடி யோடியுட்
    பதிபுகுவ தெக்கா லமோ
தயவுதந் தெனையாண்ட தேவரீர் பாதமலர்
    தனையணைவ தெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
    சமயமீ தாளு தற்கே
மயிலாடல் போனடன முள்ளநீர் பின்ளுெடர
    வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித் தீனே. (௪)

ஈனந் தரும்புகழ்க் கூடான தேகவுற
    வேகுவது மெக்கா லமோ
இன்றுளோர் நாளைக் கிருப்பதும் பொய்யென்ப
    தெய்துவது மெக்கா லமோ
யானையொட்டகமேறு முடலும்லொட லொட்டையென்
    றறிவதினி யெக்கா லமோ
ஆனந்த மானபொரு ளாநந்த மாயடிமை
    யாவதினி யெக்கா லமோ

தானானே தானானே தானானே யென்றுநான்
றானாவ தெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தானா தற்கே
வானினுங் கருணைவா னுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.

கடன்மடை திறந்தெனை வருண்மடை திறந்தடிமை
கண்குளிர்வ தெக்கா லமோ
கங்கற்ற பேரின்ப வெள்ளத்தின் மூழ்கியென்
கலிதீர்வ தெக்கா லமோ
உடல்குழைய நெக்குருகி விழிநீரு மாறாக
ஆறுவது மெக்கா லமோ
உன்னுளே பற்றியெரி யுந்தீயமர்ந் துளமு
முட்குளிர்வ தெக்கா லமோ
சடைவனோ யிடைகொண்டு மிடைவனோ தேவரீர்
தாம்வருவ தெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தானா தற்கே
வடிவேது மற்றவடி வுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.

ஈனமின் ஞானோ தயத்தையென் கண்கண்
டிருப்பதினி யெக்கா லமோ
ஏறாத மேட்டுக்கு முத்துலையி னீரிறைத்
திளையாத தெக்கா லமோ

கோனுன குருநாத னும்மடிமை நெஞ்சினிற்
குடிகொள்வ தெக்கா லமோ
குறைவற்ற தேசோ மயச்செல்வம் வந்துகுதி
கொள்வதுவு மெக்கா லமோ
தானே மகிழ்ச்சிபெற் றோனேயென் றன்னைநீர்
தழுவுவது மெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தற்கே
வானோர் வணங்குநெறி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௭)

இலைசருகு கந்தமூ லங்களா லென்கும்பி
யெரியொழிவ தெக்கா லமோ
என்பெலா நெக்குருகி நிற்குநிலை சொக்கிநின்
றின்புறுவ தெக்கா லமோ
உலையிட்ட மெழுகெனப் பாழான கன்னெஞ்ச
முருகுவது மெக்கா லமோ
ஓடியலை சிந்தையு மாடிய கறங்குபோ
லுழலாத தெக்கா லமோ
சலியாது கான்மலை கடன்மீ துறைந்தருட்
டனையணைவ தெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தற்கே
வலியமலை தன்னைநிக ருள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (அ)

ஏதமில் லாதகுரு வடிசென்னி மீதெடுத்
தேந்துவது மெக்கா லமோ
ஏழையடி யேனறிவி லாமலுள றுந்தமிழ்க்
கிரங்குவது மெக்கா லமோ
நீதமத பேதங்க ளற்றுமே யெங்குமிது
செல்வதுவு மெக்கா லமோ
சிறியார் மனைற்சோற்றை நிகரிதென் றறிஞர்பிழை
செப்பாத தெக்கா லமோ
சாதிவரை யற்றகுரு நாதனே முத்திநிலை
தருவதினி யெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தற்கே
வாதசம யக்கடப் புள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
மக்கநக ராளும்மு கம்மதி றருல்பாதம்
வருவதினி யெக்கா லமோ
வந்தெனது சிந்தைகுடி கொண்டுமகி ழுண்டடிமை
வாழ்வதுவு மெக்கா லமோ
எக்கால மெக்கால மெக்கால மெக்கால
மென்றழுவ தெக்கா லமோ
எக்கால மெந்தையே தேவரீர் கூடவந்
தெனையாள்வ தெக்கா லமோ
தக்கநிலை மீதிலே சொக்கிமன நிற்குவிறு
சாதருள்வ தெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தற்கே

முப்பாழ் கடத்திவைத் தப்பால் நடத்துமுறை
முறையாக வருள்பு ரியவும்
மத்தியி லுதித்தமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (௧௦)

ஆக பாடல்-கஅஅ.

எட்டாவது,

# காட்சிநிலை.

---

வளிவசப் பட்டும் பொறிவசப் பட்டும்
தெளிவசத் திருந்த சிந்தையை யனைத்தும்
ஒருவழி யோங்கு முயர்மன வழியே
திருவொளி கனிந்து திவலையிற் றிகழ்ந்து
வெளியி லிரவும் விளங்கிய பகலும்
ஒளியா யிருந்த வுவமை யென்னத்
தோற்றுந் தோற்றந் தோற்றவருள் கெனப்
போற்றிப் போற்றிப் புகழ்ந்திரந் துயர்த்தது.

மனமனைந் தர்ச்சிக்கப்பணிந்து வசம்பண்ணிச் சென்
றூடச் சிறியவெற்கருள வரவேண்டும்.

ஆத்தாளை யெனையீன்ற வாலையா நந்தியை
யணைந்திடற் கருள்பு ரியவும்
அம்பிகை மனோன்மணிக் குண்டலித் தாய்பதமு
மர்ச்சிக்க வருள்பு ரியவும்
பார்த்தாளை யாவையுங் காத்தாளை யென்றும்
பணிந்திடற் கருள்பு ரியவும்
பரையாளை மாநல்ல சிறையாளை யென்வசம்
பண்ணிவைத் தருள்பு ரியவும்
சேர்த்தாளை வான்கருணை பூத்தாளை யொத்தபடி
சென்றூட வருள்பு ரியவுஞ்
சிறியாளை மெத்தவும் பெரியாளை யறியவுஞ்
சிறியவெற் கருள்பு ரியவும்

மாற்றுள னுப்பாது தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (க)

மனம்பதம்பணிந்து சேவிக்கச் சிறப்பிடுசரண்புகத்
தடையற வரவேண்டும்.

பத்துவய துடையசிறு பெண்ணென வென்றாய்
பதந்தொழுற் கருள்பு ரியவும்
பாலான வாமம்மைத் துப்பூசை பண்ணிப்
பணிந்திடற் கருள்பு ரியவுஞ்
சித்தந் தெளிந்துபர தெய்வசந் நிதிசென்று
சேவிக்க வருள்பு ரியவுஞ்
சின்மய சிதாகாச தேவதைக் கென்றுஞ்
சிறப்பிடற் கருள்பு ரியவுஞ்
சத்தியத் தொடுபரா சத்திசமு கத்திற்
சரண்புகற் கருள்பு ரியவுஞ்
சங்கநிதி பத்மநிதி போலுதவி யாய்நின்று
தடையறற் கருள்பு ரியவும்
மற்றெவ ரிருந்துமென் றவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (உ)

மனம்முயற்சி மோகங்கடத்திக் காட்டிச் சூக்ஷம்
வகை தொகையாக வரவேண்டும்.

மூலமுத லாறுவரை தாண்டிமேற் றுண்டவு
முயற்சிதந் தருள்பு ரியவும்

மூலவர்க் கங்கனென வாலையைப் பூசிக்க
மோகமெற் கருள்பு ரியவுங்
காலைப் பிடித்திழுத் தூக்கர் தாத்தைக்
கடத்திலைத் தருள்பு ரியவுங்
காலனுக்குங் காலனாகயுங் கற்பமுறை
காட்டிநல் லருள்பு ரியவுங்
தூலத்தை விட்டுவிட வொட்டாது சூக்ஷாதி
சூக்ஷமொன் றருள்பு ரியவுஞ்
சுழியின்ன தென்றுசோ டசமின்ன தென்றுவகை
தொகையாக வருள்பு ரியவும்
வாலாய மாகமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே.
மனத்தைக் காட்டிக் கண்ணே தயைபுரிந்து பிரசாதமொன்று
பார்த்துப் பரிகரித்தருள வரவேண்டும்.
கலையாம லீராறு கலையினிலே குலையுமுன்
கட்டிடற் கருள்பு ரியவுங்
காலைப் பிடிக்கிறே னம்மைகுண் டலியையென்
கண்ணையெற் கருள்பு ரியவுஞ்
சலனமற வுங்கருணை நிதியே தயாளனே
தயைபுரிந் தருள்பு ரியவும்
சரணார விந்தமுன் பாதார விந்தப்ர
சாதமொன் றருள்பு ரியவும்
பலகா லிரந்தனும் பலனாக வென்முகம்
பார்த்துநல் லருள்பு ரியவும்
பாவியடி யேன்படுங் கண்கலக் கங்களைப்
பரிகரித் தருள்பு ரியவும்

மலமத்தனையுமற்ற தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (அ)

மனமுத்த முத்திரைத் தண்ணீரைத் தள்ளாமற்
றெளித்து சேவிக்க வரவேண்டும்.

மோகந் தவிர்க்கமூலை யாரையணை யாமலுனை
முத்தமிட வருள்பு ரியவும்
மொழியைத் தவிர்க்கவாய் மூடலுட னேமோன
முத்திரையை யருள்பு ரியவுந்
தாகித்த வென்றனுக் கென்னையூட் டாதுநற்
றண்ணீரை யருள்பு ரியவுந்
தாராத வருளெலாந் தந்தடிமை கொள்ளவுந்
தள்ளாம லருள்பு ரியவுந்
தேகத்தை விட்டுவிடு முன் மனந்தேறித்
தெளிந்திடற் கருள்பு ரியவுஞ்
செம்பொனிற மானசிறு வாலையிரு காலையுஞ்
சேவிக்க வருள்பு ரியவும்
மாகத்த ஞானமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (௯)

மனத்தின் பேரின்பம் பெண்ணாசையாசை ஆதரிப்பு
நாசமாய் நாளுக வரவேண்டும்.

பேசாது மவுனத் திருக்கவும் பேசாத
பேரின்ப மருள்பு ரியவும்
பெண்ணாசை மண்ணாசை யும்வாலை யம்பிகைப்
பெண்ணாசை யருள்பு ரியவும்

ஆசாபசாசைத் துறந்தவுன் றிருவடியி
　　ஞசைதந் தருள்பு ரியவும்
ஆதரவு மற்ற தரிப்பாரு மற்றவெனை
　　யாதரித் தருள்பு ரியவும்
நாசச் சரீரமு நாசமா முன்புவன
　　நாசமெற் கருள்பு ரியவும்
நானென்ப தற்றுநா னென்ப தற்றுநா
　　னுகை வருள்பு ரியவும்
வாசாம கோசரத் தவராஜ சிங்கமே
　　வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
　　மவுனதே சிகநா தனே.

மனத்தை யாசைபயங் தடாரித்துத் தாடந்துபாகம்
வைத்துப் பழக்கவரவேண்டும்.

ஆசரித் தம்பிகை தனைப்பூசை செய்துய்யு
　　மாசையொன் றருள்பு ரியவும்
அறமியற் றவுமனத் திறமியற் றவுமெனக்
　　கபயநின் றருள்பு ரியவும்
தாய்செத்த பிள்ளையென வேசற் றிராமற்
　　றடாரித்து னருள்பு ரியவும்
தடையினிற் றடைபடா நின்றெளிரு மெய்த்திருத்
　　தாடந்து னருள்பு ரியவும்
பாசத்தை வீசுமெம னுக்குட் படாதுநின்
　　பாகம்வைத் தருள்பு ரியவும்
பஞ்சாட் சரத்தையுந் துஞ்சாச் சரத்தொடு
　　பழக்கிவைத் தருள்பு ரியவும்

வாசற் கடந்துமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (எ)

மனங்களித்துக் கனுவென்று நானுண நற்றவந்
துணைத் துறையருள வரவேண்டும்.

காணாத காட்சியைக் கண்டடிமை யுள்ளங்
களித்திடற் கருள்பு ரியவுங்
கண்கொண்டு காணப்படாநின்ற வெவையுங்
கனுவென்று னருள்பு ரியவும்
நாணுமட மாதரைக் கண்ணி னிற்காணுமுன்
நானுண வருள்பு ரியவும்
நாவுருசி தேடுதற் காவிகெட் டலையாது
நற்றவம தருள்பு ரியவுந்
துணைத் துரும்பாக்க வுந்துரும் பைப்பெருந்
துணைக்க வருள்பு ரியவுந்
துரியமய மாய்நின்ற பெரியபொரு ளைத்தொழுந்
துறையொன்றை யருள்பு ரியவும்
வாணாள் விடாதமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (அ)

மனத்தை யடிமைகொண் டனுபூதிமுடித்திடமுடித்
தாண்டித் தந்தருள வரவேண்டும்.

ஆண்டிஞே டாண்டனந் தங்கோடி வைத்தெனையு
மடிமைகொண் டருள்பு ரியவும்

அதிசோதி பரவிக் கிடந்தொளி பரப்புமுன்
னனுபூதி யருள்பு ரியவும்
மூண்டெரியு மங்கியிற் கருவிகர ணங்களை
முழுத்திடற் கருள்பு ரியவும்
மூக்குமுனை வாயிலண் ணாக்கினுனி யாலடைய
மூடிவைத் தருள்பு ரியவும்
தாண்டிமீ ராறுகலை தாண்டாம லுஞ்சுழினை
தாண்டிடற் கருள்பு ரியவுந்
தாண்டாம னின்றமதி மண்டலங் கொண்டவமு
தந்தந்து னருள்பு ரியவும்
மாண்டவையு மாண்டமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே.

மனத்திற்குச் சுகந்துணைதழுவித் தரித்திட ஆட்கொண்டு
ஆளாக்கி யருளவர வேண்டும்.

சுந்தரச் சோதிமணி மார்போ டணைத்துச்
சுகந்தந்து னருள்பு ரியவுஞ்
சொந்தவடி யேன்சிந்தை நொந்திடா வண்ணமே
துணையுநின் றருள்பு ரியவுஞ்
சந்திரோ தயமெனச் சிந்துமொளி தந்துகை
தழுவிநின் றருள்பு ரியவுந்
தளதளென் றவிர்தரு ஜகச்சோதி பரவித்
தரித்திடற் கருள்பு ரியவும்
அந்தரத் துலவுகம னக்குளிகை யொன்றளித்
தாட்கொண்டு னருள்பு ரியவும்

அம்பிகை பதம்பணியு மாளாக வும்மெனையு
      மாளாக்கி யருள்பு ரியவும்
வந்தனங் கைக்கொளுந் தவராஜ சிங்கமே
      வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
      மவுனதேசிகநா தனே. (௧௦)

ஆக பாடல்-௧௧௮.

ஒன்பதாவது,

# தியான நிலை.

தோற்றிய காட்சியிற் சுயத்தினைப்பற்றி
யேற்றி யேற்றி யிடம்வல முன்பின்
இயங்கா தோங்கி யெழுமனந் தன்னினை
வுயங்காத் தொன்றி யுண்மையிற் றிகழ
நிறுத்தி வன்மன நிலைதிரி யாமற்
குறித்த பொருளொடு கொளுத்த றியானம்
என்னும் பாங்கி னிம்முறை யருள்கவென்
றுன்னி யுன்னி யுவந்திறந் துயர்த்தது.

மனமோகமதை நாளும் நாட்டிவைத் தவிழாமலவிந்துத்
தேனெழுகச் சிறப்பிட வரவேண்டும்.

நவகண்ட யோகமே நான்கொண்ட மோகமதை
நாளுமெற் கருள்பு ரியவும்
நாவதனை யோட்டிவிட் டந்நாள மாட்டிநிலை
நாட்டிவைத் தருள்பு ரியவும்
அவிழுமொன் பதுவாயி லுங்கட்ட வுங்கட்டு
மவிழாம லருள்பு ரியவும்
அவயவா திகளுநவ கண்டமா யவிழத்
தவிழ்ந்திடற் கருள்பு ரியவும்
நிலையொன் றாயினும் புன்னுனியின் மணியெனத்
தேனெழுக வருள்பு ரியவுஞ்
சிற்றூற லூட்டவுஞ் சித்தாந்த முத்திச்
சிறப்பிட்டு னருள்பு ரியவும்

மவுனமணி யானமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாருணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (க)

மனம்பெரும்பாதை யென்றில் திர்த்தூளி பண்ணிக்கடந்து
கையூன்றி யொன்றுக்கு ளொன்ருக வரவேண்டும்.

பாலமூந் தாண்டியப் பானடக்கப் பெரும்
பாதையொன் றருள்பு ரியவும்
பாருக்க ளோவனந் தங்களைத் திர்த்தூளி
பண்ணிவிட் டருள்பு ரியவும்
காலா லடர்ந்துசமர் செய்துதல மாறுங்
கடந்திடற் கருள்பு ரியவும்
கண்டத்தை வென்றுகா யாபுரிக் கோட்டையென்
கைப்படற் கருள்பு ரியவும்
ஓலமிட் டோங்கார வுன்னதக் கம்பமங்
கூன்றிடற் கருள்பு ரியவும்
ஓசைமணி மண்டபஞ் சென்றுநின் ஒன்றுக்கு
ளொன்ருக வருள்பு ரியவும்
வாலிபம் மூதிருமுன் றவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாருணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (உ)

மனமூட்புக வொடுங்கிடத் தூங்கிடச் சோபிக்கத்
தகைதீர்ந்திட வேற்றிட வரவேண்டும்.

ஓங்கார மதுகொண் டெழும்பிராண வப்பதியி
னுட்புகற் கருள்பு ரியவும்

உள்ளறையி னுள்ளவொரு மூலையிற் சென்றங்
கொடுங்கிடற் கருள்பு ரியவும்
தூங்காது தூங்கிசிவ யோகநித் திரைவந்து
தூங்கிடற் கருள்பு ரியவுஞ்
சுடருண்ட கர்ப்பூர வுண்டைபோ னின்றுடல்
சோபிக்க வருள்பு ரியவுந்
தேங்காத் திருக்கருணை வெள்ளம் படிந்துதகை
தீர்ந்திடற் கருள்பு ரியவும்
தேறாத சிந்தையுந் தேறவு மெனைக்கடைத்
தேற்றிவிட் டருள்பு ரியவும்
வாங்காவி ஞேசையொடு தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே.

மனமங்கங்கென் றுள்ளடங்கிப் பக்குவம்பண்ணி அமிர்த
பானந் திருத்தித் தீரமருள வரவேண்டும்.

ஆயபன் னிருகலையு மாயாது தங்கவும்
மங்கங்கென் றருள்பு ரியவும்
அங்குசிங் கென்றுமைம் பத்தோ ரெழுத்துள்
ளடங்கென்று னருள்பு ரியவும்
பாயவும் வாசிகலை தேயவும் பக்குவம்
பண்ணிவிட் டருள்பு ரியவும்
பாலூற வுஞ்சுழினை மேலேற வும்மமிர்த
பானமெற் கருள்பு ரியவும்
தீயைப் பொருத்தியென் னேயத் திருத்தித்
திருத்திவைத் தருள்பு ரியவுந்

தோரத் தெளிக்கவுஞ் சேரப் பழிக்கவுந்
　　தீரமொன் றருள்பு ரியவும்
மாயையைக் காயவுந் தவராஜ சிங்கமே
　　வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
　　மவுன தேசிகநா தனே.　　　(அ)

மனம்வழிமருவச் சமர்செய்யத் தம்பனம் அடைத்துச்
சரணடைய வரவேண்டும்.

வங்குவங் கென்றுரீங் காரமுட னேகமேல்
　　வழிவிட்டு வருள்பு ரியவும
வாசிதனி லேற்றியெனை மாசற்ற பரவெளியின்
　　மருவவைத் தருள்பு ரியவுஞ்
சங்குசிங் கென்றங்கு சண்டமா ருதமெனச்
　　சமர்செய்ய வருள்பு ரியவுந்
தம்பனங் கும்பித்தி ரேசிக்க வாயுவிட்
　　டம்பன மருள்பு ரியவும்
அங்கடங் குண்டவயிர் தங்கடைந் தென்கட
　　மடைத்துவைத் தருள்பு ரியவும்
அம்மைகுண் டலிபாத மாசரித் துச்சர
　　ணடைந்திடற் கருள்பு ரியவும்
மங்காத தங்கமே தவராஜ சிங்கமே
　　வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
　　மவுனதே சிகநா தனே.　　　(கூ)

மனத்தீரஞ் சின்மயமெய்தாம லென்னுள் சுடர்சொந்
தத்தொடருள வரவேண்டும்.

செத்தாலும் வைத்தடிபின் வாங்காது முன்னேறு
　　தீரமொன் றருள்பு ரியவும்

சிற்பர வெளிக்கூடு செல்லவும் சொல்லரிய
சின்மய மருள்பு ரியவும்
எத்தாத முத்திநெறி யேற்றவு மற்றெவையு
மெய்தாம லருள்பு ரியவும்
ஏகவுரு வாகிநின் றெங்குநிறை கின்றபொரு
ளென்னுளுற வருள்பு ரியவும்
சுத்தமய படிகச் சுயஞ்சோதி பரவிமுச்
சுடர்கொழித் தருள்பு ரியவும்
சொக்குமதி மோகமுக வாரியமு ளாட்டவுஞ்
சொந்தத்தொ டருள்பு ரியவும்
வற்றாத செல்வமே தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே.

மனத்தினிஷ்டம் வைத்தென்னை யெற்காராய்ந்து அறிவ
தற்குச் சித்தம்வைத்து செய்யுநல்லருள்
புரிய வரவேண்டும்.

இதமாக வேயடிமை பதமாம் பொருட்டாக
விஷ்டம்வைத் தருள்பு ரியவும்
எல்லாம தாயேது மில்லாது மாய்நின்ற
வென்னையெற் கருள்பு ரியவும்
அதுவேய தானவோ ரருமறைப் பொருளையா
ராய்ந்திடற் கருள்பு ரியவும்
அறிவதற் கரியவறி வாகார மானவுனை
யறிவதற் கருள்பு ரியவும்
சிதையுமித யத்தையுஞ் சிதையா திருத்தவுஞ்
சித்தம்வைத் தருள்பு ரியவும்

சேவடி கொடுத்திருந்த நாயடிய னுக்குதவி
செய்புநல் லருள்பு ரியவும்
மதமற்ற மதமுற்ற தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (எ)

மனத்தைத்தூக்கித் துணிந்திருந்திருக்கும்
நிலையம்நெக்குருக வரவேண்டும்.

தொலையாப் பவக்கட லொருலைத்துமக் கரையிலே
தூக்கிவிட் டருள்பு ரியவுந்
தொல்லைதரு தொல்லுலகை வெல்லவுந் துறவிற்
றுணிந்திடற் கருள்பு ரியவும்
இலையும் புலர்ந்தசரு குங்கும்பி யெரியற்
றிருந்திடற் கருள்பு ரியவும்
இருகலையி னூடுருவி முக்கலைக் கப்பா
லிருக்குமுன் னருள்பு ரியவும்
நிலையற்ற விதயத்தை நிலையத் திருத்துநன்
னிலையமொன் றருள்பு ரியவும்
நிற்குநிலை சொக்கியா னிற்காது நிற்கவும்
நெக்குருக வருள்பு ரியவும்
மலைவெலாந் தீர்க்கவுந் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (அ)

மனக்கருத்துக் கற்பித்தொழிந் தொதுங்கி நடந்து
நானெனவரவேண்டும்.

கானக விலங்கினின மாகும்வை ராக்கியக்
கருத்தொன் று னருள்பு ரியவும்

காடுவீ டாகவும் வீடுகா டாகவும்
கற்பித்த லருள்பு ரியவும்
ஊனிறைந் தோருரு வெடுத்தகா யத்துற
வொழிந்திடவு னருள்பு ரியவும்
உண்டுடுத் துப்பூணு மூலகநடை யெனைவிட்
டொதுங்கிடற் கருள்பு ரியவும்
ஞானோத யங்கண்டு மானாபி மானம்
நடந்திடவு னருள்பு ரியவும்
நானென்ற கற்றநா னானும் வண்ணநீ
நானென்ற தருள்பு ரியவும்
வானுச்சி யுலவுமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே.

மனத்தி னடனஞ் சந்நிதியிற் சென்று திறந்து
வசம்வளர்ந்தேற வரவேண்டும்.

நாசிநடு வணைநட்ட நடுவினின் றல்லாசு
நடனமிட வருள்பு ரியவும்
நாதநா தாந்தம் முழங்குமோர் தெய்வசந்
நிதியில்விட் டருள்பு ரியவும்
தேசுதரு மோசைமணி மாமண்ட பத்தினுட்
சென்றிடற் கருள்பு ரியவும்
திரையைக் கடந்தங் கடங்கவுள் ளறையைத்
திறந்துநந் தருள்பு ரியவும்
வாசங் கொழித்தகம லாசனத் தையுமென்
வசங்கொடுத் தருள்பு ரியவும்

வற்றாத செல்வங்க ளெத்தேச காலமும்
வளர்ந்தேற வருள்பு ரியவும்
மாசேது மற்றமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (௬0)

ஆக பாடல் - ௨0௮.

பத்தாவது,

## சமாதி நிலை.

—∘∘⁂∘∘—

ஒன்றிய ததனை யொன்றற் றறுகுணம்
இன்றித் தானுந் தன்பெய ரின்றிச்
சேர்ந்துஞ் சேரா திருந்தவுண் மையோ
டார்ந்து மதுவு மாகா தாக
அங்ஙனங் குறித்த வம்முதற் பொருளொடு
தான்பிற னாகத் தகையது சமாதி
ஆகு மென்றே வந்நிலை யருள்கவென்
றேக மாகி யிரந்திரந் துயர்த்தது.

மனங் கூடுகொள்ளாம லடங்கி யஞ்சி ஒடுங்கி
யொழிதற்கு வரவேண்டும்.

கூடுவிட் டுக்கூடு பாயுங் கருக்குருவி
கூடுறைய வருள்பு ரியவும்
கொல்லனுலை மேனின்று கூத்தாடு குறளிகுதி
கொள்ளாம லருள்பு ரியவும்
ஆடுநற் குண்டலிப் பாம்புமெய்ப் புற்றினு
ளடங்கிடற் கருள்பு ரியவும்
அஞ்சாத வஞ்சுபுல வேடர்களு மடியனேற்
கஞ்சிடற் கருள்பு ரியவும்
ஓடியுழல் சிந்தையுங் கணமேனு மூசென்
றொடுங்கிடற் கருள்பு ரியவும்
ஓவியம் போலவே சும்மா திருக்கமற்
றொழிதற்கு னருள்பு ரியவும்

வாடுத லறிந்தமெய்த் தவராஜ சிங்கமே
 வரவேண்டு மென்ற னருகே
மாகுணக் குடிவாழு மென்னகத் தீசனே
 மவுனதே சிகநா தனே. (க)

மனந்திகழ்ந்து தீயிற் சரிப்படச் சமஸ்தமும்
ஆட்கொண்டடக்கி வரவேண்டும்.

தீபம் பொருந்துகர்ப் பூரமென வுடலந்
 திகழ்ந்திடற் கருள்பு ரியவும்
தீயிலிட் டென்னைக் கருக்குமுன் பென்னகந்
 தீயிலிட் டருள்பு ரியவுஞ்
சாபங்க ளரச் சமாதிநிறை வேறிச்
 சரிப்படற் கருள்பு ரியவும்
தடையுறா துதவுகற் பகமா யிருந்தே
 சமஸ்தமு மருள்பு ரியவும்
ஆபத்தை யும்மடமை பாபத்தை யுந்தொலைத்
 தாட்கொண்டு வருள்பு ரியவும்
ஆங்கார மெல்லா மடக்கியுன் கைக்குள்
 ளடக்கிவைத் தருள்பு ரியவும்
மாபதவி சேர்த்துமெய்த் தவராஜ சிங்கமே
 வரவேண்டு மென்ற னருகே
மாகுணக் குடிவாழு மென்னகத் தீசனே
 மவுனதே சிகநா தனே. (உ)

மனத்தின் றத்துவந் தான்சாக நான்சாவ நான்வரு
முன் சித்தி சீக்கிரமருள வரவேண்டும்.

தான்செத் திருந்துலக முழுதுமா சாளுமோர்
 தத்துவ மருள்பு ரியவந்

தான்சாக வும்மருந் துணபாரி யாரியான்
ருன்சாக வருள்பு ரியவும்
நான்சாமு ஞன்சாக நாடினே ஞன்சாமு
ஞன்சாக வருள்பு ரியவும்
நாள்வருமு ஞன்சாக நாள்வந்து நான்சாக
நாள்வருமு னருள்பு ரியவுந்
தீஞ்சுதிரு பிடிசாம்ப லாகவுந் தாஞனை
சித்தியெற் கருள்பு ரியவுந்
தேகநிலை யல்லவே திருவரு ளிரங்கிமாச்
சீக்கிர மருள்பு ரியவும்
வாஞ்சாலை யானமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே.

மனங்கரைதந்தக் கவிழ்ந்து விளையாட வீடுபுக
எண்ணமின்புற வரவேண்டும்.

கண்ணுறு விண்ணு றெனப்பொங்க வுங்கங்கு
கரைதந்து னருள்பு ரியவுங்
கருணு சமுத்திரம் பரவிவந் தென்னைக்
கவிந்திடற் கருள்பு ரியவும்
விண்ணுடர் போற்றிசெய் யண்ணுவு மென்கூட
விளையாட வருள்பு ரியவும்
வேதவே தாந்தமெல் லாம்விட்டு நட்டநடு
வீடுபுக வருள்பு ரியவும்
எண்ணரிய ஞானவா நந்தமோ னந்தரு
மெணந்தாற் கருள்பு ரியவும்

ஏகதத் துவசொரூ பத்தைமோ கித்தடிமை
யின்புறற் கருள்பு ரியவும்
மண்ணொளிர விண்ணுலவு தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (௭)

மனமென்ன மிரங்கித் தீக்ஷைசெய்வித் தொடுங்கி
யுறைந்திட வரவேண்டும்.

இன்றுளோர் நாளையு மிருப்பரென் றெண்ணாத
வெண்ணமொன் றருள்பு ரியவும்
இந்தவடி யானுனது சொந்தவடி யானென
விரங்கிநல் லருள்பு ரியவும்
தென்றிசைக் கைலாச மாம்பொதிகை வாசனே
தீக்ஷைதந் தருள்பு ரியவுந்
தேசிக சிகாமணிய னேயடிமை பண்படச்
செய்வித்து னருள்பு ரியவும்
ஒன்றுக்கு ளொன்றான வொன்றுக்கு ளொன்று
மொடுங்கிடற் கருள்பு ரியவும்
உள்ளுக்கு ளுள்ளுருகி யுள்ளுக்கு ளுள்ளே
யுறைந்திடற் கருள்பு ரியவும்
மன்றிலெவ ருந்தொழுந் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. (௮)

மனமுனையே தொழ வுண்ணின்று மறந்திடாது வாய்த்திட
நானுக நானறிய வரவேண்டும்.

ஊனான காயமுயிர் போமுனடி யேனுமுனை
யேதொழற் கருள்பு ரியவும்

உயிரினுக் குயிரா யுறைந்தநீ யென்றுமெற்
குண்ணின் றருள்பு ரியவும்
வானுதி பூதலய மானபெரு மானெனை
மறந்திடா தருள்பு ரியவும்
வாக்குமன மணுகாத பூரணந் தானாக
வாய்த்திடற் கருள்பு ரியவும்
நானாக நின்றநா னானாக நின்றநா
னானாக வருள்பு ரியவும்
நான்மறையு மறியாத நான்மறையி னுட்பொருளை
நானறிய வருள்பு ரியவும்
மானென விரைந்துமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே.

மனமடர்ந்து பகர்ந்தீதென் றிருந்திட
மதமண்ணாக வரவேண்டும்.

அதிமோக மாகிமெய்ஞ் ஞானவா னந்தத்
தடர்ந்தேற வருள்பு ரியவும்
அங்கிங்கெ னாமலெங் கெங்குமது வானதெது
வதுபகர்ந் தருள்பு ரியவும்
இதயங்க ணின்றுமித யங்களறி தற்கரிய
தீதென்று னருள்பு ரியவும்
ஏகமா கியபரா பரமுமென் பரமா
யிருந்திடற் கருள்பு ரியவும்
மதமத்த னையுமற்ற மதமூற்றி யானுமும்
மதமாக வருள்பு ரியவும்

மனமயக் கந்தரும் மென்மயக் கம்வெறும்
　　மண்ணுக வருள்பு ரியவும்
மதிமுகத் தழகனே தவராஜ சிங்கமே
　　வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
　　மவுனதே சிகநா தனே. (எ)

மனமைய மணைகால் பாதுகாத்துப் பாரிசப்
பம்பரமாட வரவேண்டும்.

அடியனே னுய்யவு மாதரவு செய்யவு
　　மையமற் றருள்பு ரியவும்
அன்புமழை சொரியவா றுய்ப்பெருகி வந்துமற்
　　றணைதத்த வருள்பு ரியவுங்
கடலின்மடை போலுமென் கண்மடை திறக்கவும்
　　கால்பாய வருள்பு ரியவுங்
கதியான பூமியுயி ரேற்றியதை யும்பாது
　　காத்துநின் றருள்பு ரியவும்
படுபாதி பங்குபற் றுமலும் முழுதுமென்
　　பாரிசத் தருள்பு ரியவும்
பாசமற் றிடவுநன் னேசமுற் றடிமைபம்
　　பரமாட வருள்பு ரியவும்
மடமடென நடனமிடு தவராஜ சிங்கமே
　　வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
　　மவுனதே சிகநா தனே. (அ)

மனமன்பறிவு வீறுவீடுபதம் பரமடைய வரவேண்டும்.

அகடமுறு சாமர்த்திய மெல்லா மறந்தடிமை
　　யன்புடைய வருள்பு ரியவும்

அதிகப்ர சங்கங்க ளெல்லா மறந்தடிமை
யறிவடைய வருள்பு ரியவும்
வெகுளிவிளை யாட்டுமுத லெல்லா மறந்தடிமை
வீறடைந் தருள்பு ரியவும்
வேடிக்கை யொடுபகட் டெல்லா மறந்தடிமை
வீடடைய வருள்பு ரியவும்
பகடிபரி யாசங்க ளெல்லா மறந்தடிமை
பதமடைய வருள்பு ரியவும்
பாடிப் படித்தகதை யெல்லா மறந்தடிமை
பரமடைய வருள்பு ரியவும்
மகுடந் தரித்தமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே.

மனம் போகாமற் புணருதற்குச் செழுஞ்சாரல்
தினந்தந்து நான்சாரநாளுக வரவேண்டும்.

பூஞ்சோலை வாழுமோ ஞனெனவும் வீணிலுன்
போகாம லருள்பு ரியவும்
பொற்று மரைக்குளத் தவளையா காதுனைப்
புணருதற் கருள்பு ரியவுந்
தேஞ்சாறு பாஞ்சாறு பாயுநின் பொதிகைச்
செழுஞ்சார லருள்பு ரியவுந்
திவ்யமா மதுரந் திரண்டமதி யமிர்தந்
தினந்தந் தருள்பு ரியவும்
நான்சாமு ஞன்செத்து நாடோறு முன்சமுக
நான்சார வருள்பு ரியவும்

நாதமும் வேதமும் நாதநா தாந்தமு
　　நாளுக வருள்பு ரியவும்
வாஞ்சித்த லோடுமெய்த் தவராஜ சிங்கமே
　　வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
　　மவுனதே சிகநா தனே. (௯0)

நேரிசையாசிரியப்பா.

இவ்வகை யெல்லா மியைந்தும் பயன்கொளும்
அவ்வகை யெவர்க்கே யாயினும் விதியருள்
அருளுவ தாயி னவரே யுலகெலாந்
தெருளு மூர்த்தித் திருப்பொரு ளென்ப
நல்வழி தேடு நரர்காள்
சொல்வழி யிஃதே துணிந்துகொ ளீரே.

இச்சதகப்
பெயரின் கருத்துப்
பொருளும், கொள்ளுந்
தன்மையும், இச்சதகஞ் சொல்லிய
காரணமும், காரியப்படுதலும், இச்சதகத்திற்
போந்த அதிகாரமும், இவ்வதிகாரத்துட் பொருளும்,
இவற்றி னியல்பும், ஒழுங்கும், இவற்றிற்குப்
பழஞ்சூத்திரக் கோட்பாடும் விளக்கிக்
காட்டி, அதிகாரந்தோறும் பன்மை
யா யொழுகி ஈற்றினொருமை
யாய்முற்றுப்பெற்ற இவ்
வகத்தீசர் சதகத்தின்
அதிகாரத்துறையி
னமைத்த

நிலமண்டிலவாசிரியப்பா.

அருந்தவ முனிவ ரனைவரி னுயர்ந்த
பெருந்தவ முனிவர் பெயரே யாயினும்
அமைவன வமைக்க லாகுமே லாமே
கமைவரு தாபதர் கருத்தஃ தன்றால்
அகமும் புறமு மாயெப் பொருட்கும்
வகைபெற விளங்கு மதியா வுண்மையைக்
காரணத் தானுங் காரியத் தானும்
ஆரணத் தானு மருந்தெளி வானுந்
தொகுக்கவு மிவற்றாற் றொகுத்ததை மறுத்து
வகுக்கவு மாகா வன்மைபூண் டமையால்
அகத்தீ சனுக்கினம் புறத்தீச னென்றோ
தகத்தீச னென்றே யாளவேண் டியதால்

அவ்வகத் தீசனை யானந்தம் பூத்த
இவ்வகத் தீச னின்பமோ டிறைஞ்சித்
தன்பெயர் மாறிக் காரணந் தந்து
பின்பெயர் மாறி யறிவெனப் பிறழ்ந்து
மாயை யுடையான் மனமெனத் தோன்றுஞ்
சாயை யுடைய தாடாண்மை வீரனை
அடக்கி யொடுக்கி யணிகா ரணப்பெயர்
மடக்கி மடக்கி வாரா தாக்கித்
தானே தானுந் தன்மையின் விளங்கற்
கானு முறைசெய்வா னகத்தி னமைத்துத்
தவமும் யோகமுந் தகையென வியல்பின்
அவயவ மெல்லா மருளினோ டளித்து
விளக்கியாட் கொள்கென வேண்டி வேண்டித்
துளக்கி யிரந்துயர் தீரக் கேட்டது.

அகத்தீசர்சதக முற்றுப்பெற்றது.

ஆ பாடல்-உகஅ.

# மருதூர் நபியாண்டவரைச்

## சுகானுபவமுறத் துதித்தல்.



ஆசிரியவிருத்தம்.

வெட்டவெட் டத்தளிர்கள் விட்டுப் படர்ந்தடரும்
　　வீசுபா சாட வியெனும்
வினையென்ற பெருமா வனக்கான கக்காடு
　　வெட்டிநிர்த் தூளி பண்ணி
வெகுளிக ளெனும்பல பரட்டுமுட் காடெலாம்
　　வேரோ டறப்பி டுங்கி
விரிகருணை வீரகண் டாமணி யணிந்துதுணி
　　வீரவா யுதம ணிந்து
வெற்றிகொண் டெழுமகங் காரவேங் கைப்புலியை
　　வேட்டையா டித்து ணித்து
வெட்கமொடு துக்கமும் வெருட்சியு மருட்சியும்
　　வெருண்டோட வருமி ராகம்
வெஞ்சின மெனுங்கொடிய துஷ்டமிரு கங்களும்
　　வெடிவா லெடுத்தெ டுத்து
வீறுவிட் டலரியொன் றேடொன்று சேராமல்
　　வெருவியே கிடவ டித்து
வெல்லரிய மாமாயை யெனுமலைப் பாம்பினை
　　விவேகமெனு மண்டா விஞல்
வெட்டிப் பிளந்தபின் மின்னுகர ணத்தொடு
　　விரிந்தோடு கருவி வேரை

மீறிய விசாரமெனு மண்வெட்டி கொடுவெட்டி
மேட்டிமைக ளென்னு மரமும்
வெட்டுண்ட மாறேடு முட்களுஞ் சேர்த்ததின்
மெய்த்தவக் கனலை மூட்டி
விண்டலமு மண்டலமு மொன்றாங் கின்றபெரு
வெளிவாயு வதனை யூதி
மெய்யான வடவன லெனச்சுடர் பரந்தபுன்
விழிமாயை யெனுமி ருளெலாம்
விரிகதிர் வரக்கண்ட பனியின்முக மென்னவழி
விட்டுவெளி வாங்கி யேங்க
வெட்டியைக் கட்டிவழி வெட்டிப் பறிக்கின்ற
வினையறக் காடு வெட்டி
சுட்டபி னகந்தைகுண மென்றகற் பாறையைச்
சுழியெனு முளியி னாலே
சொச்சமற வெட்டிப் பிடுங்கியிடை பிங்கலை
சூட்டியென் னுஞ்ச கட்டிற்
றாக்கிவைத் தேற்றியே தொந்தங்க ளென்னுமொரு
தோல்வடக் கயிறு கட்டித்
துட்டத் துடுக்கெனுங் காமாட்டி யாட்களுந்
தோல்வடந் தொட்டி முக்கத்
தூயமெய்ஞ் ஞானவை ராக்கியக் கசையினாற்
றொண்டுசெய் யென்ற டித்து
தூராதமிடி யெனுந் தொல்லைப் பெருங்கேணி
தூர்க்கவத ணுனி ரப்பிச்
சொற்பிரண வச்சொருப நிச்சயக் கருமுகில்
சூழ்ந்துதங் காவூன் றியே

சுற்றிக் கவிந்துகொண் டானந்த மழைமாரி
சோராம லேபொ ழிந்து
சொல்லரிய நெஞ்சக மெனும்பூமி சுத்தவெளி
யாகவச் சுத்தி ருத்தித்
துய்யசதுர் வேதத்தை நால்வரப் பாக்கியே
துறவெனுங் கிடைம றித்துச்
சுருதிமுடி வென்னுமெய் யறிவுழவு தற்கான
சூத்திரமெ னுங்க லப்பை
துன்பவின் பங்களென் பதிரண்டு மாடாய்ச்
சுருக்கிவார் பூட்டி யிதமாய்த்
துள்ளிக் குதித்தெடுத் தேறியே போகின்ற
துடியடக் கின்ற தடமாய்த்
தூலமொடு சூக்குமத் தாசையு நிராசையாய்த்
தொந்தகிர்த் தொந்த மாகிச்
சோதிமய மாயொன்ற வித்தகப் பண்ணையா
டொட்டிதய மேழி யதனைச்
சொன்னபடி வந்திடக் கௌரிகுண் டலியெனுஞ்
சுழுமுனைத் தாறெடுத்துப்
பட்டும் படாதுவைத் திடைதரிசி லாதுழுது
பல்வருண பேத மென்னும்
பாவிகச் சாதிவரை கின்றகளி யாளரது
பழக்கவழு கக்க லக்கிப்
பழக்கமெனு மடைதலுங் கட்டியு மிதித்தபின்
பழகரிய சமர சமெனும்
படிகொண்ட மூலமுத லாதார மாறும்
பரப்பிப் பரம்ப டித்துப்

பகருமிரு கரைநோக்கு வருசுழியி லமைகின்ற
பலனெனுங் கைகு லுக்கிப்
பாரமலே யோடணு வகண்டமொடு கண்டம்
பரிக்ஷிக்கொ ணுதவி தையைப்
பட்டுமுர் தாதுபிந் தாமலே பாவியே
பருவமது செய்த பின்பு
பாசட ரெடுப்பரென் றெடுப்புநீ ரதனையும்
பார்த்துக் கழித்து விட்டுப்
பத்திவை ராக்கியக் கடன்மடை திறந்துகால்
பாய்ச்சியது பயிரா கவே
பரிபாக பக்குவக் காலமது பிசகாது
பார்த்துப் பதந் தன்னிலே
பற்றிப் படர்ந்ததொண் ணூற்ருறு தத்துவம்
பலகளை யறப்பி டுங்கிப்
பரிபூர்ண மாகவே நாளுக்கு நாட்கதிர்ப்
பலகோ ளறப்ப ழுத்து
பாளையென் னும்பருவ முற்றியே முத்திப்
பலன் பெற்ற சமுசாரிநீ
படைகொண்ட மும்மண்ட லத்தினு முன்மகிமை
பற்றிப் படர்ந்த குருவே
பாதபங் கயமதுக் காளடிமை யாகாது
பாவத் தழுந்து வேனே
பாசவலை வீசியே மோசமது செய்கின்ற
பாவையர்க் காளாவ னே
கொட்டிய கருந்தே ணிகர்த்த விழி மின்னூர்
குவித்தவிரு பொற்கொங் கையுங்

கோசமொடு மும்மத மிறைக்கின்ற கர்விதக்
குஞ்சரக் கொம்பு தானோ
கொஞ்சுகிளி மொழியார்க ளுவுநல் லரவினது
கொடியநச் சுப்பை யதோ
கூரிருட் கூந்தலென் சொல்லுகேன் கோடையிடி
குடிகொண்ட கருமே கமோ
கோதையிள மின்னார்கள் யோனிப் பெருங்கேணி
குறையாத யானை மடுவோ
கூறுமுகி லேழும் படர்ந்துவரு டிக்கினும்
குறையருக் கெடுபள் ளமோ
கொத்துக் கடங்காத மதகரி தனக்குமது
கொப்பமோ படுபள் ளமோ
குருவைத் தொழாமனுக் குப்பைக ளொதுங்குமோர்
குப்பைக் கிடங்கு தானோ
கொலைசெயம னிருக் கின்றபடு களமோ
கொடுஞ்சிங்க மிடிபொ தும்போ
குமுகுமென வதிரசத் தேனொழுகு கனியெனக்
கொண்டு நெஞ்சினை வாட்டுதே
கோளடப் பொன்னிலத் தாசைதரு கின்றதே
கோதையர்கள் காத லாலே
கூளமத ரிப்பதே யல்லா திருந்துநான்
குளிர்காய நேர மில்லையே
கூர்குணம சத்துநிற் கின்றபர வெளியெலாங்
குடிகொண் டிருந்த குருவே
கொடியகெடு மாயையைக் கூடாதிருக்கின்ற
குறியருள்வ தென்று புகலாய்

கோடானு கோடிமறை யாலுமறி யாக்குணங்
குடிகொண்ட கருணை வடிவே
கூவாயி லாகஇல் லல்லாகு வென்பதற்
குரியமகு மூது நபியே.

ஆக பாடல்-உககூ.

# தவமேபெற வேண்டுமெனல்.

கட்டளைக் கலித்துறை.

ஓடியலைந் துழிவ் வையகமுற்று முழன் றுழன் றுந்
தேடியெடுத்த திரவியம்யாவையுஞ் செத்தபின்பு
நாடியெடுப்பது முண்டோமறந்து நடக்குநெஞ்சே
வாடியிறந்தறஞ் செய்வாய்குணங்குடி வாய்த்திடுமே.

பெண்ணாசையென்கின்ற பேய்பிடித்தாடிய பேதைநெஞ்சே
கண்ணாலதில்வருங் கன்மங்கள்யாவையுங் கண்டிலையோ
எண்ணாதபாவங்க ளெண்ணாமற்செய்யுமிப் பேருடம்பு
மண்ணாகநற்றவஞ் செய்வாய்குணங்குடி வாய்த்திடுமே.

ஆடும்பலிபொரு ளாட்சியென் றங்கிங்கு மாயலைந்து
பாடும்படுவதுன் பாரமதோசொல்லு பாழ்மனமே
கூடும்படுபயன் றேடுமெப்பாலுள்ள கூட்டம்விட்டு
வாடும்படும்பெரு முண்மைக்குணங்குடி வாய்த்திடுமே.

ஆதிமுகம்ம தருணாமுகம்ம தருள்விரிந்த
சோதிமுகம்மது தோற்றமுகம்மது தூயவுளத்
தோதுமுகம்மதென் றுண்மைகண்டாலிவ் வுலகினுக்கு
வாதிமுகம்மதி னோடுகுணங்குடி வாய்த்திடுமே.

எல்லாப்படைப்பும் படைத்துமிரணங்க ளீபவனே
அல்லாவொருவ னவனன்றிவேறிலை யாகையினாற்
சொல்லாமற்சொல்லுஞ் சுருதிமுடிவினிற் சொல்லிறந்த
வல்லான்குணங்குடி வாழ்ந்திருப்போமினி வாருமினே.

அய்யோவுலகி லழியாவரம்பெற்றி யாரிருந்தார்
அய்யோவுனக்கந்த வாதரவென்னதி லாசையென்னே

பொய்யானவாழ்வும் புலையாட்டுநம்பும் புதரலர்க்கும்
ஒய்யாரமுள்ள குணங்குடியார்க்கு முறவில்லையே. (௬)

உற்றூரிருந்தென்ன பெற்றூரிருந்தென் னுனக்குதவி
சற்றாயினுமில்லை சொன்னேன்சொன்னே னிதுசத்தியமாய்ச்
செற்றாலும்வைத்தடி வாங்காமனிர்கிற் செயம்பெறலாங்
கற்றாற்குணங்குடி கொண்டிடுவாய்மனக் கண்மணியே. (எ)

எண்சாணுயரத் திருக்கும்பனையி னிறக்கியுண்ணும்
பஞ்சாக்கரமெனும் பாரியகள்ளினைப் பாய்ந்தெடுத்துத்
தஞ்சாவூராளு மகராஜன்பாதந் தனைப்பணிந்தால்
கெஞ்சாக்குணங்குடி கொள்வாயிதுபுத்தி கேணெஞ்சமே. (அ)

படிக்கும்படிக்கு நடக்கின்றதையோவிப் பழஞ்செருப்பா
லடிக்கட்டுமோவுனக் கொத்தாசையாரதை பாவிநெஞ்சே
மூடக்கிப்படுத்துக்கொண் முச்சந்திக்குப்பையின் மோடுகளி
லடக்கிக்குணங்குடி கொள்வாயதுபர மானந்தமே. (௯)

ஆருக்குவந்த விருந்தென்றிராம லொருமையுள்ள
பேருக்குவந்த தெனவேநினைந்து பிரியமுற்றா
ரூருக்கமைந்ததோ ரன்னங்களுண்டுண் டொன்றும்முறையாப்
பாருக்குணல்ல குணங்குடிபோய்ப்பள்ளி கொண்டிடுமே. (௰)

மூலமுகம்மது முப்பாழ்முகம்மது மோனமுள்ள
பாலமுகம்மது பக்தியுள்ளோர்களும் பாய்ந்தெடுக்கும்
வேலுமுகம்மது வேதாந்தமூல விளக்குடைய
கோலுமுகம்மது குன்றாக்குணங்குடி கொண்டவர்க்கே. (௧௧)

நாளைக்கிருந்திட லாமெனவெண்ணி நடுநெஞ்சமே
நாளைக்கிருப்பதை நம்புவதோவில்லை நானிலத்தில்
நாளைக்கும்பின்னைக்கும் நாமிருப்போமென்னு நாட்டமற்றெவ்
வேளைக்குநல்ல குணங்குடிவாழ்ந்திரு வேளையிதே. (௧௨)

நாட்டமென்றேயிரு வுன்னிருபாதத்தி னன்னிலையின்
ஓட்டமென்றேயிரு வொன்றானவக்கர மோதியதின்
ஆட்டமென்றேயிரு தோற்றமெவையு மலியுடைய
நீட்டமென்றேயிரு நெஞ்சேகுணங்குடி நிச்சயமே.

நாடுநகருண்டு நல்லோர்களுமுண்டு நாதனுமுண்
டோடுமெனக்குண்டென் றெண்ணியுன்கையி லுடல்பசித்தார்
போடென்றுகொண்ட கவளத்தைவாங்கிப் புசித்துக்கொண்டு
பாடு குணங்குடி வாழ்ந்திடலேபர மானந்தமே.

தலையேபெறவேண்டுமெனல் முற்றுப்பெற்றது.

ஆக பாடல் - ௨௩௩.

# குறையிரங்கியுரைத்தல்.

நேரிசைவெண்பா.

கள்ளினங்க ளுண்ணுங் கழுதைகா ணென்சொலினும்
எள்ளளவு மும்மிதயத் தெய்திலதே-உள்ளம்
இணங்கா மடமாந்த ரெக்கேடு தான்கெடினுங்
குணங்குடியார்க் குண்டோ குறை. (க)

உற்றா ரழாம லுறவின்முறையார் திட்டாமற்
பெற்றார் பிறந்தார் பிதற்றாமல்—எத்தாலும்
அங்கிங்கெ னாதபடி யாரும் பெருவெளியிற்
றங்கல் குணங்குடியே தான். (உ)

நாசிநுனியி னயனத் திடைவெளியிற்
றேசிகனா ராடுந் திருநடனம்-வாசிகொடுத்
தோராயெழுவா யுணர்வா யருணெஞ்சே
பாராய் குணங்குடியின் பால். (ங)

பாலிக்குந் தோற்பையைப் பற்றியுளம் பாவையரின்
காலிடுக்குக் காகக் கரைவனோ-மேலெடுக்கும்
உன்னருளை யுங்காட்டி யோங்குங் குணங்குடியின்
றன்னருளை யுங்காட்டித் தா. (ச)

நஞ்சுண்ணு மாப்போலு நாத னருள்பெறவென்
னெஞ்சேநீ புண்ணாய் நினைப்பதேன்-அஞ்சாதே
என்றுமுத்த னம்முள்ளே யேகா திருப்பதால்
ஒன்றுங் குணங்குடியி னுள். (ரு)

நீண்டாண் பனைபோலு நெற்பதரைப் போலுமே
ஞன்றா னெனைப்படைத்தா யென்கோவே-தீண்டாத

கல்லா யிடாவவைதநின் கைத்தடியான் மோதினுல்
அல்லாற் குணங்குடியா கா.

மெத்தத் துணிபோர்க்க மெத்தமெத் தக்குளிருஞ்
சற்றுதுணி போர்த்துவரச் சற்றுகுளிர்—இற்றதுணீ
இல்லைக் குளிருமிலை யில்லையிது தானுளமே
செல்லக் குணங்குடியார் சீர்.

ஆ௳ பாடல் - ௨௯௦.

———

## நாகூர்மீருன்சாகிபு அவர்கள்மீது பாடிய

### ஆசிரியவிருத்தம்.

திக்குத் திகந்தமுங் கொண்டாடி யேவந்து
நின்கூறி நிற்பர் கோடி
சிங்காச னதிபர்க ளதையேந்தி யேவந்து
ஜெயஜெயா வென்பர் கோடி
அக்கனருள் பெற்றபெரி யோர்கனொலி யார்களணி
யணியாக நிற்பர் கோடி
அஞ்ஞான வேரறுத் திட்டமெய்ஞ் ஞானிக
ளணைந்தருகு நிற்பர் கோடி
மக்கநக ராளும் முகம்மதி ரசூல்தந்த
மன்னரே யென்பர் கோடி
வசனித்து நிற்கவே கொலுவீற் றிருக்குமுன்
மகிமைசொல வாயு முண்டோ
தக்கபெரி யோனருட் டங்கியே நிற்கின்ற
தவராஜ செம்மே ருவே
தயையையைத் தெனையாள் சற்குணங் குடிகொண்ட
சாகுற்க மீத ரசரே. (க)

முற்றிற்று.

---

### கலிவிருத்தம்.

வஞ்ச வேல்கொடு மார்பி லெறியினும்
விஞ்ச வேதழல் மூட்டி யெரிக்கினு
நஞ்சி னாழ லுக நலியினும்
அஞ்சிடாதவ ரானந்த மாவரே. (க)

முற்றிற்று.

ஆ பாடல் - உகஉ.

---

# ஆனந்தக்களிப்பு.

இரக்கத்துணிந்துகொண் டேனே-எனக்
கிருக்குங்குறைமுழுதும் நிகழ்த்திக்கொண்டேனே (இர)

கொடிகட்டிக் கொண்டெழு கோடி—தனங்
குவித்தந்த மகிழ்ச்சியாற்கூத்துகளாடி
கெடுபுத்தி யுடையோரைக் கூடி-யானுங்
கெட்டலையாமலே கெதிபெற நாடி (இர)

சொற்கடங் காச்சுக ஞானம்—தன்னிற்
சும்மாவிருக்குஞ் சுகமதே மோனம்
எட்கிடை யாயினும் பானந்-தன்னை
எடுத்துண் டிருப்பதற் கிச்சித்தேயானும் (இர)

வஞ்சிய ராசையைத் தாட்டி-விட்டு
வழிபெற்றுக் களிப்புற்று வாசியைப்பூட்டி
துஞ்சாத வறிவினைச் சூட்டி—அற்பத்
தொல்லுலகாசை துணித்துவிட் டோட்டி (இர)

அஞ்சுதா ளுட்டிய மாடி-அது
அஞ்சோடு நாலோட்டையடையாமலோடி
பிஞ்சழிந் திடுமென்று நாடி-யானும்
பேரின்ப வீட்டினைப் பிரியமாய்த் தேடி (இர)

நற்பூச்சந் தனவத்தர் பூசி-மிக
நன்றாக வைத்தாலும் நாற்றமே வீசி
எப்போதுங் கொடுமைசெய் தோசி—என்றே
இவ்வுடல் வாழ்வுக ளியாவையும் வீசி

6 மாளிகை மேல்வீடு கட்டி—மனை
வாழ்வைநிலையென்று வாழ்கின்ற மட்டி
நாளையெமன்வந்த தட்டிக்-கொண்டு
நடப்பானென்றறியானையடுப்பதை வெட்டி (இர)

7 பட்டும்பணிகளும் பூண்டு-கொண்டு
பாழான வாழ்வினைப் பலனென வாண்டு
கெட்டவர்களைக்கண்டு மீண்டு-கதி
கிடைக்கும்படிக்கு நடப்பதற் கீண்டு (இர)

8 காமக்குரோதங்க ளற்று-சூழுங்
கருவி கரணஞ் சகலமு மற்று
நேமநிஷ்டைகளையு மற்று-நின்ற
நிலையுமறந்து குருவடி பெற்று (இர)

9 எத்தனை யெத்தனை காலம்-இந்த
என்புதசையா லெடுக்கின்ற கூலம்
மெத்தன வாழுமிஞ் ஞாலம்-அதை
மேவாது மேவாவெடுத்திந்தக் கோலம் (இர)

10 எந்நிலை தன்னை யறிந்தே-என்னுள்
இருந்தாடுஞ்சூத்திரம் பொருந்திட மறிந்தே
அன்னிய நிலைகளைத் துறந்தே-குரு
அருளினாலநுதின மருளெலா மறிந்தே (இர)

11 ஆழித் திரும்பென வங்கும்-இங்கும்
அலைந்து திரிவதி லஞ்ஞானந் தங்கும்
பாழிற்கெடாதருள் பொங்கும்-படி
பார்த்துத் துணிந்து பரதேச மெங்கும் (இர)

12 காடுங்க ரையுஞ்சு ழன்று-ஒரு
காட்சியுங் காணேனெனவேயு ழன்று

தேடும் பருவத்திற் சென்று-திக்குத்
திசையொன்றுந்தெரியாமற்றெளிதற்கு நின்று (இர)

3 ஆடிய கூத்தினைப் போற்றி-அருள்
ஆனந்தஞ் சேரக் கருளினிற் றேற்றி
ஓடிய காற்றினை யேற்றி-அதில்
உருகியொழுகுமமிர்தத்தைத் தேற்றி (இர)

4 நாலிரண் டரைமுழ மான-பிண
நாற்றச்சடலத்து ஞானென்று ஞானக்
கோலம் விளக்கிய மோன-அருள்
குருவடி திருவடி யுருவத்தை மான (இர)

எறியு மகத்தைதத்த டுத்தே-அதில்
இச்சித்துப் பக்ஷிகவைத்த டுத்தே
அறிவைக்கொண்டறிவைத்தொ டுத்தே-அருள்
ஆனந்தஞ்சேர்க்கின்ற வருளினை யெடுத்தே (இர)

பாரினிற் பலவிதங் காட்டி-நல்ல
படிகத்தின் குணமெனப் பரவொளி சூட்டி
ஆரிய னருளினைக் கூட்டி-குரு
அருள்செய்த வுடனேயென் வினைகளையோட்டி (இர)

மண்டப வுள்ளறை விண்டு-வரும்
மாமண மூறிய தேமது வுண்டு
உண்டுகளிப்போரைக் கண்டு-யானும்
உள்ளத்திருக்கினைத் தள்ளிக்கைக்கொண்டு (இர)

மாதவந் தன்னைப்பு ரிந்து-ரச
வாதங்கள்செய்கிறோ மென்றுதிரிந்து
சூதோடு வாதைப்பு ரிந்து-கெட்ட
சூதரைச் சத்தியமாகப்பி ரிந்து (இர)

19 பொறிபுல னடங்கிய காலே-பரி
பூரணப் பொருள்வந்து வாய்க்குமப்பாலே
அறிஞரு மறியாது போலே-காணும்
ஆனந்த வெள்ளத்தி னூடின தாலே (இர)

20 நினைவுங் கனவு மறந்து-நின்ற
நிலையு மறந்தெழு கலையு மறந்து
இனமு மனமும் மறந்து-பின்னர்
இதனிடைதோற்றிய விதங்களு மறந்து (இர)

21 கற்பட்டுப் பாய்கின்ற தோயம்-போலக்
காட்டி மறைக்கும் பிரபஞ்ச மாயம்
அற்பர்க்குத் தெரியாது பாயம்-என்று
ஆலோசனைசெய் தழியுமுன் காயம் (இர)

22 எனையானென் றறியாத பாடு-என்னை
இக்கோல மாக்கிய தேயதன் கேடு
தனையானு மெதிர்க்கையி னோடு-கொண்டு
சாபத்துட னடந்து கோபத்தி னோடு (இர)

23 விண்ணுக்குள் வெளியிருள் மாற்றி-அதில்
வேதாந்த மூலவிளக்கினை யேற்றிக்
கண்ணுக்குண் மணியாகத் தோற்றி-வருங்
காரணமான கடவுளைப் போற்றி (இர)

24 எல்லாரு மானிடர் தாமோ-இந்த
இழிவான பிரமைக ளெல்லார்க்கும் போமோ
கல்லெல்லா மாணிக்க மாமோ-என்று
கற்பித்த காரண குருவடி போற்றி (இர)

25 நாதமுங் கீதமுங் கேட்கும்-அந்த
நாயகன் சந்நிதி தன்னிடை சேர்க்கும்

# நிராமயக்கண்ணி.



ஆதி முதலே யகண்டபரி பூரணமென்
றோதுங் குணங்குடிகொண் டோனே நிராமயமே.

தேசிகனு னென்றே திருநடன மாடுகின்ற
வாசாம கோசரமே வாழி நிராமயமே.

சுத்தத் திருவடியிற் சொக்கி யருள்பெறுமுன்
செத்திறந்து போனுலென் செய்வே னிராமயமே.

கண்ணே மணியேயென் கண்ணிறைந்த காரணமே
விண்ணே மெய்ஞ் ஞானவெளியே நிராமயமே.

எந்த விதமென் னிதயந் தெளிவதற்கே
பந்த வினையகலப் பாராய் நிராமயமே.

இறந்தான் முதலகத்தி லென்னதியா னென்பதெல்லாந்
துறந்தானே யந்நிலையே சொல்வாய் நிராமயமே.

வற்ருச் சமுத்திரமே வள்ளலே வான்பொருளே
சித்த ருளத்திற் றெளிவே நிராமயமே.

உம்பர்க்கு மெட்டாதென் றென்றிமறை யோலமிட்ட
செம்பொற் கிரியே செயமே நிராமயமே.

பேய்ச்சுக் கடங்காத பேரின்பத் தேனமிர்தங்
காய்ச்சி வடித்த கடலே நிராமயமே.

அந்தரத்தி னுள்ளேநின் றூடுதிருக் கூத்ததனை
சிந்தை யறிகிலனென் செய்வே னிராமயமே.

மோன மவுனமணி மூடிவைத்த பெட்டகமே
தேனமுத வின்பத் தெளிவே நிராமயமே.

## மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

மண்பட்ட நெஞ்ச மயக்கமெலாந் தீரவருள்
பண்பட்டார்க் கல்லோ பயன்கா ணிராமயமே.

மனவாக் கணுகா மறைந்தவான் செஞ்சுடரே
இனமாதி யற்ற விறையே நிராமயமே.

பார்க்குமிட மெல்லாம் பரிபூ ரணமாக
ஏற்கையுட னின்ற வியல்பே நிராமயமே.

விண்ணுமுதன் மண்ணாய் விளங்கிநின்ற மெய்ச்சுடரே
கண்ணேயென் னின்பக் கடலே நிராமயமே.

துன்புறுமென் னெஞ்சத் துயரமெலாந் தீர்க்கவெனக்
கன்புருவாய் நின்ற வருளே நிராமயமே.

அங்கிங் கெனவொண்ணா வகண்டபரி பூரணமாய்
எங்கு நிறைந்த விறையே நிராமயமே.

நாட்டு மிருவினையு நாட்டா ருனதருளின்
றேட்டாள ரென்ற திறமே நிராமயமே.

படர்ந்த மனங்குடியாம் பக்குவர்பா சாடவியைத்
தொடர்ந்து தொடர்ந்துவெட்டத் துணிவார் நிராமயமே.

உத்தமர்கட் காகா வுலுத்தப் புலையரெனும்
பித்தர் நெறியினரோ பேசாய் நிராமயமே.

பாவபுண்ணி யத்தைப் பறக்கவிட்ட பத்தர்தமக்
கேவல் விலகவிலை யென்றாய் நிராமயமே.

முத்திதரும் வேத மொழிந்த வழிநடக்கப்
பெற்ற குருவென் பிணைகா ணிராமயமே.

ஊடத்தைப் பிணமா முடலை யிடிசுவரை
ஏற்ற படிவிடுத லீன நிராமயமே.

வஞ்ச மழிந்து வருபாசம் விட்டொழிந்து
நெஞ்சந் தெளியநெறி நிற்பார் நிராமயமே.

ஒருபாவொருபஃது.

மனுநீதி புணராத பெருமூடர் முதியோர்கள்
மரியாதை தெரியா தவர்
மதிவேறு மொழிவேறு பொருள்வேறு படுவார்கள்
மலிகோர நிறைநா வினர்
சினமூறு மனமாய மறியார்கள் குறியாத
சிறியோர்கள் வெறியாள் பவர்
திருமாது பகையாளர் மலர்மாது வசையாளர்
திறமாது மறமாள் பவர்
துனிசேரு நடையாளர் பெரியோர்க ளடையாளர்
துயர்வாழு மிடையா ளர்கள்
தொழுதாலு மகலாத கெடுபாவ முடையார்கள்
சுகமேது பெறுவார் களோ
வினவாத வினையாவு மொருபோது மணுகாமல்
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னோதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே.
பேராத வன்புடைய தாய்தந்தை தந்துணைவர்
பேராசை தந்த மனையார்
பேறான மைந்தர்புடை சூழ்சால் பெருங்கிளைஞர்
போரா நிறைந்த வுறவார்
ஆரா யிருந்திடினு மாராரு வந்திடினும்
ஆதார மொன்று மிலையால்
ஆகாத வன்செயலி னாலே யெதிர்ந்தவினை
யாடாத கன்றொ ழியமேற்
சாராது வெம்பவ மெலாமோட வெங்கணிலை
தாழாதி கம்ப ரமுநீர்
தாமாக நின்றருளி னுள்வீர்க ளென்றுமது
சார்பா யடைந்த வெளியேம்

மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

மண்பட்ட நெஞ்ச மயக்கமெலாந் தீரவருள்
பண்பட்டார்க் கல்லோ பயன்கா ணிராமயமே.

மனவாக் கணுகா மறைந்தவான் செஞ்சுடரே
இனமாதி யற்ற விறையே நிராமயமே.

பார்க்குமிட மெல்லாம் பரிபூ ரணமாக
ஏற்கையுட னின்ற வியல்பே நிராமயமே.

விண்ணுமுதன் மண்ணாய் விளங்கிநின்ற மெய்ச்சுடரே
கண்ணேயென் னின்பக் கடலே நிராமயமே.

துன்புறுமென் னெஞ்சத் துயரமெலாந் தீர்க்கவெனக்
கன்புருவாய் நின்ற வருளே நிராமயமே.

அங்கிங் கெனவொண்ணா வகண்டபரி பூரணமாய்
எங்கு நிறைந்த விறையே நிராமயமே.

நாட்டு மிருவினையு நாட்டா ருனதருளின்
நேட்டாள ரென்ற திறமே நிராமயமே.

படர்ந்த மனக்குடியாம் பக்குவர்பா சாடவியைத்
தொடர்ந்து தொடர்ந்துவெட்டத் துணிவார் நிராமயமே.

உத்தமர்கட் காகா வுலுத்தப் புலையரெனும்
பித்தர் நெறியினரோ பேசாய் நிராமயமே.

பாவபுண்ணி யத்தைப் பறக்கவிட்ட பத்தர்தமக்
கேவல் விலகலிலை யென்றாய் நிராமயமே.

முத்திதரும் வேத மொழிந்த வழிநடக்கப்
பெற்ற குருவென் பிணைகா ணிராமயமே.

ஊத்தைப் பிணமா முடலை யிடிசுவரை
ஏற்ற படிவிடுதே லீன நிராமயமே,

வஞ்ச மழிந்து வருபாசம் விட்டொழிந்து
நெஞ்சந் தெளியநெறி நிற்பார் நிராமயமே.

தொந்தங் கடந்தே சுபமனையி னல்லாலென்
புந்தி மயக்கம்விட்டுப் போமோ நிராமயமே.

வாராக் கருணைமழை வந்துபொழிந் தாலொழியத்
தீரா மனமயக்கந் தீரே னிராமயமே.

பாயும் பசுபாச மடிய மடியவரு
டாயனைய வின்பந் தருவாய் நிராமயமே.

அய்யனே யென்னை யணைத்தாட்கொண் டாளவந்த
மெய்யனே நாத வெளியே நிராமயமே.

கூறு மவத்தைக் குணங்குடிபோ மன்பருக்கில்
யாரை நிகரிடுவ தையா நிராமயமே.

பித்தம் பிடித்தலையும் பேய்க்குரங்கு போற்கரணம்
புத்தி தனையலைக்கப் போமோ நிராமயமே.

தஞ்சமெனு ஞானத் தடாகத்தின் மூழ்குநர்க்கு
விஞ்சிய நாத விளக்கே நிராமயமே.

ஆரிருந்தென் னூர்போயென் னுவிக்குறு துணையாம்
பேறுபெறச் செய்தாற் பிழைப்பே னிராமயமே.

போகாக் கவலைப் புழுக்கமெல்லாந் தீர்வதற்கு
வாகா யருள்புரிய வாராய் நிராமயமே.

காமக் கடல்கடக்கக் கர்த்தவியக் கப்பல் வைத்தால்
நேமநிட்டைக் கம்பம் நிலைகா ணிராமயமே.

நின்னைச் சரண்புகுந்தா னிர்மூட மாகவெனை
யென்னத்துக் காட்கொண்ட தியம்பாய் நிராமயமே.

சிந்தை யறிவைச் சிதையவிட்டுன் னருள்பெறவே
வந்தேதற்கு நற்கருணை வைப்பாய் நிராமயமே.

தேனமுதே பாகு திரண்ட பெருங்கடலே
வானவர்க்கு மெட்டா மணியே நிராமயமே.

## மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

இந்த விதய மிணங்கி வணங்கவரு
டந்தடிக்காட் கொண்ட தாணு நிராமயமே.

இடம்பொரு ளேவ லெவையு மறந்தகுணங்
குடியார்க் குவமைக் குறியே னிராமயமே.

ஆழாழி தானு மணைகடவா தாணைதனிற்
றாழ விலையோவென் றாயே நிராமயமே.

தீது நலமறியேன் றிசைநாக மற்றெவையும்
ஈதென் றறியே னெளியே னிராமயமே.

மீளா வெளியில் விழுற்கிரைத்த நீரெனவும்
பாழி லலைவதுமென் பாவம் நிராமயமே.

ஈன்றெடுத்த மாதாவெனை யாட்கொண் டாள்வதென
ஆண்டவனைப்ப தென்றே வருளாய் நிராமயமே.

சாத்திரங்க ளோதுஞ் சழக்கர் தமக்குமருள்
மாத்திரைப்போ தேனும் வருமோ நிராமயமே.

அய்யனே மெய்யருளி லாசையற்ற நீசனுக்கும்
உய்யுந் திருக்கருணை யுண்டோ நிராமயமே.

காதறருங் கண்ணீர்க் கரைபுரள நின்றவர்க்குச்
சூதுதருங் கண்ணீர் தொலையும் நிராமயமே.

வஞ்சங் குடியிருந்து வாழு மனத்தினருக்
கெஞ்சா திருக்கு மிருப்பே நிராமயமே.

பற்றற்று நின்ற பரம பதத்தினருக்
கெத்தொழிலுஞ் செய்ய வியல்போ நிராமயமே.

வாதே யகண்டகுணங் குடிவாழ வைத்தாயே
ஏதே பெருமையெனக் கென்றாய் நிராமயமே.

என்றுமிருப் போமென் றெண்ணியெண்ணி யென்னிதயஞ்
சண்டை பிடிக்கச் சரியோ நிராமயமே.

மட்டுக் கடங்கா மயக்கமெல்லாந் தீர்த்துவெளிப்
பட்டோர் கட்கல்லோ பயன்கா ணிராமயமே.

மன்னு முயிர்க்கு மறலி வரும்பொழுதில்
உன்னையன்றி யார்தா முளரோ நிராமயமே.

எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணி யிடைந்துமனம்
புண்ணாவதற்கோ புகுந்தே னிராமயமே.

உள்ள துரியதெல்லா மொழியா துரைத்தவெனைத்
தள்ளி விடத்தான் றகுமோ நிராமயமே.

வன்னத் திருக்கருணை வாழுந் திருவடிக்கே
என்னத்தைச் செய்வே னெளியே னிராமயமே.

கற்ற படிநடக்கக் கல்லாத பாவியெனைச்
சித்தந் தெளியவருள் செய்வாய் நிராமயமே.

பேச்சற்றுச் சிந்தை பிரக்ஞையு மற்றபதம்
வாய்ச்சார்க்கல் லோமவுனம் வாய்க்கு நிராமயமே.

நிஷ்டை நிருவிகற்ப நித்திரைகொண் டேயிருக்க
அஷ்டாங்க யோகமெனக் கருளாய் நிராமயமே.

தொல்லுலகி லல்லற் றுயரமெலாந் தீர்க்கவொரு
சொல்லருள வந்த துரையே நிராமயமே.

உயிர்த் துணைவரேனு முளந்தெளியா வுலுத்தரையோர்
மயிர்க்கு நிகர்குறிக்க மாட்டே னிராமயமே.

கொல்லா விரதத்தைக் கொல்லக் கொலைஞருள்ளங்
கல்லாகத் தானே கணித்தாய் நிராமயமே.

எத்தனையோ வுத்தி யெடுத்தெடுத்துச் செய்யுமுடல்
உற்றா ரிருக்க வுடையு நிராமயமே.

வாயே புலம்பி வருபாசப் பேய்பிடித்த
தீயனெனச் சொன்னாலென் செய்வே னிராமயமே.

## மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

தாயிருக்கப் பிள்ளை தளரா தொருபோது
நீயிருக்க நான்றளர நேரோ நிராமயமே.

சொல்லுக் கடங்காச் சுகங்காண் டுறவிகட்கு
நல்லறிவு சற்றே நருங்கா ணிராமயமே.

மந்திபத்தி னூடே மறைந்த மணிவிளக்கை
நித்தம் விளங்கவரு ணேராய் நிராமயமே.

மெத்தப் படித்த வெறும்பாசப் பித்தருக்கே
சித்தந் தெளியாதென் செய்கே னிராமயமே.

கள்ள விருளைக் கடிந்துகரை யேறுதற்குத்
தெள்ளியவான் சோதித் திரளே நிராமயமே.

ஓட்டாதே யுன்னைவிட்டு மோட்டி நயமிடறில்
மாட்டாதே யான்பொறுக்க மாட்டே னிராமயமே.

தன்னை யறிந்தாற் றலைவன் றனையறிந்த
தென்னு மொழியே யிதங்கா ணிராமயமே.

அபய மெனைக்காப்ப தண்ணலே யுன்னுபய
முபய முபயமுன தபய நிராமயமே.

பிரியா வுனதடியைப் பின்றொடர்ந்தார் பின்றொடர
அறியாச் சிறியேனென் னையா நிராமயமே.

நற்குணமே கொண்ட தொழும்பனியான் றொல்லுலகிற்
கற்குணத்தா ரென்போலுங் காணே னிராமயமே.

பொய்யுங் கவடுமுன்னே பூட்டிவைத்த பெட்டகமாய்
நையு முடலெடுத்தே னுங்கா ணிராமயமே.

நங்குல் பகலொழித்த காரணர்க்கோ நின்னருளைப்
பங்கு கொடுத்தாய் பகராய் நிராமயமே.

தேறுப் பிரபஞ்சத் திடுக்கமெல்லாந் தீர்ந்தவர்க்கு
மாறு வருணிலைதான் வாய்க்கு நிராமயமே.

ருவதயா நிதியாய்ச் சஞ்சரித்த நெஞ்சினர்க்குப்
ரியா வருணிலைதான் பேறும் நிராமயமே.

ாத முடிநடுவும் பக்கமுன்னும் பின்னுமற்ற
ாத வடிவே நவமே நிராமயமே.

பசா திடமறிந்தும் பேய்க்குரங்கு போற்கருவி
வசா டுவதே னுரையாய் நிராமயமே.

னையாட்கொண் டாளவரு மென்குருநா தன்வடிவந்
னையார்க்குஞ் சொல்லத் தகுமோ நிராமயமே.

காப்புவித்தி னுள்ளே குடியிருந்த கொள்கையென
ப்பொருட்குஞ் சித்தா யிருந்தாய் நிராமயமே.

றுங் கருவி குடிபோன வம்பருக்கே
ாரும் நிகரோவென் னையா நிராமயமே.

ந்தை சிதையாச் சிவராஜ யோகநிலை
ந்தோர்க் கருள்புரிய வந்தாய் நிராமயமே.

காடானு கோடிமறை கூறவறி யாதவுனைத்
தடுகின்ற தென்னோவென் றிறமே நிராமயமே.

ரியா வருணிலையைப் பெற்றார்பெற் றாரெனவு
றியா வெறியனையா வையா நிராமயமே.

மனார் விருது வெனும்பாசக் கட்டறுத்தோர்
மனார் தமக்கு நமனா நிராமயமே.

ஏலங்கு மருண்மயத்தைத் தோன்றா திருண்மயமாம்
லனைத்தொலைப் பாயுனக்குப் புண்யம் நிராமயமே.

ன்னிக்க வொண்ணா மனக்குறையுந் தாய்பொறுப்பாள்
ன்ன தருளுமந்த நேராம் நிராமயமே.

ந்த வறிவை யெடுத்தெடுத்தே யோதினுமென்
ந்தி மயக்கனுவும் போகா நிராமயமே.

மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

செகத்துன் மயக்கஞ் சிதறிப் பறக்கவுமென்
றகைப்பறவோர் முத்தந் தருவாய் நிராமயமே.
உய்த்த துணர்வதெல்ல முயிர்க்குயிர்நீ தானெனவுஞ்
சித்தந் தெளிந்தோர் திறங்கா நிராமயமே.
அனைத்துயிரு நீயென் றறிந்தார் மறப்புமுதல்
நினைக்குமா றெங்கே நிகழ்த்தாய் நிராமயமே.
நின்செயல்க ளென்று நினைப்பு மறப்புமுத
லென்செயல்க ளுண்டோ வியம்பாய் நிராமயமே.
எறும்பூர ஊர விரும்புமுதற் றேய்வதுபோல்
இரும்பூரு மன்பருள மித்தகையே நிராமயமே.
கும்பிக் கிரைதேடிக் கொடுப்போர்முகம் பார்த்திதயஞ்
சம்பித் திரியத் தகுமோ நிராமயமே.
கடலின்மடை கண்டதெனக் கண்ணீர் கரைபுரளும்
அடியென்முகம் பார்த்திரங்கி யருளாய் நிராமயமே.
பருவமது செய்யப் படர்பயிராம் பக்குவர்க்குக்
கருவா மருணிலையே கனிகா ணிராமயமே.
நினைப்பு முதிப்புமெலா நின்செயலென் றன்பருளந்
தினைப்போதும் விட்டுத் திரும்பார் நிராமயமே.
சிவராஜ யோகந் தெளிந்த திறத்தினருக்
கெவரைச் சரியிடுவ தெந்தாய் நிராமயமே.
அந்திபக லற்ற வகண்டபரி பூரணர்க்கே
சிந்தை நிறைந்த தெளிவே நிராமயமே.
வேதங்க ளாலும் வெளிப்படாச் சுந்தரமாஞ்
சோதியெனக் கென்றே துலங்கு நிராமயமே.
எப்பொருளுந் தானு யிலங்குமுனைப் பூசைசெய்யப்
புட்ப மெடுக்கவுந்தான் போமோ நிராமயமே.

சருவதயா நிதியாய்ச் சஞ்சரித்த நெஞ்சினர்க்குப்
பிரியா வருணிலைதான் பேறும் நிராமயமே.

பாத முடிநடுவும் பக்கமுன்னும் பின்னுமற்ற
நாத வடிவே நவமே நிராமயமே.

பேசா திடமறிந்தும் பேய்க்குரங்கு போற்கருவி
ஊசா வெவதே னுரையாய் நிராமயமே.

எனையாட்கொண் டாளவரு மென்குருநா தன்வடிவந்
தனையார்க்குஞ் சொல்லத் தகுமோ நிராமயமே.

கொப்புவித்தி னுள்ளே குடியிருந்த கொள்கையென
எப்பொருட்குஞ் சித்தா யிருந்தாய் நிராமயமே.

கூறுங் கருவி குடிபோன வம்பருக்கே
யாரும் நிகரோவென் னையா நிராமயமே.

சிந்தை சிதையாச் சிவராஜ யோகநிலை
வந்தோர்க் கருள்புரிய வந்தாய் நிராமயமே.

கோடானு கோடிமறை கூறவறி யாதவனைத்
தேடுகின்ற தென்னோவென் றிறமே நிராமயமே.

பிரியா வருணிலையைப் பெற்றார்பெற் றாரெனவு
மறியா வெறியனையா வையா நிராமயமே.

எமனார் விருது வெனும்பாசக் கட்டறுத்தோர்
நமனார் தமக்கு நமனா நிராமயமே.

துலங்கு மருண்மயத்தைத் தோன்றா திருண்மயமாம்
புலனைத்தொலைப் பாயுனக்குப் புண்யம் நிராமயமே.

மன்னிக்க வொண்ணா மனக்குறையுந் தாய்பொறுப்பாள்
நின்ன தருளுமந்த நேராம் நிராமயமே.

எந்த வறிவை யெடுத்தெடுத்தே யோதினுமென்
புந்தி மயக்கணுவும் போகா நிராமயமே.

செகத்துண் மயக்கஞ் சிதறிப் பறக்கவுமென்
றகைப்பறவோர் முத்தர் தருவாய் நிராமயமே. ௯0

உய்த்த துணர்வதெல்ல முயிர்க்குயிர்நீ தானெனவுஞ்
சித்தர் தெளிந்தோர் திறங்கா நிராமயமே. ௯௧

அனைத்துயிரு நீயென் றறிந்தார் மறப்புமுதல்
நினைக்குமா றெங்கே நிகழ்த்தாய் நிராமயமே. ௯௨

நின்செயல்க ளென்று நினைப்பு மறப்புமுத
லென்செயல்க ளுண்டோ வியம்பாய் நிராமயமே. ௯௩

எறும்பூர ஊர விரும்புமுதற் றேய்வதுபோல்
இரும்பூரு மன்பருள மித்தகையே நிராமயமே. ௯௪

கும்பிக் கிரைதேடிக் கொடுப்போர்முகம் பார்த்திதயஞ்
சம்பித் திரியத் தகுமோ நிராமயமே. ௯௫

கடலின்மடை கண்டதெனக் கண்ணீர் கரைபுரளும்
அடியென்முகம் பார்த்திரங்கி யருளாய் நிராமயமே. ௯௬

பருவமது செய்யப் படர்பயிராம் பக்குவர்க்குக்
கருவா மருணிலையே கனிகா ணிராமயமே. ௯௭

நினைப்பு முதிப்புமெலா நின்செயலென் றன்பருளந்
தினைப்போதும் விட்டுத் திரும்பார் நிராமயமே. ௯௮

சிவராஜ யோகந் தெளிந்த திறத்தினருக்
கெவரைச் சரியிடுவ தெந்தாய் நிராமயமே. ௯௯

அந்திபக லற்ற வகண்டபரி பூரணர்க்கே
சிந்தை நிறைந்த தெளிவே நிராமயமே. ௧00

வேதங்க ளாலும் வெளிப்படாச் சுந்தரமாஞ்
சோதியெனக் கென்றே துலங்கு நிராமயமே. ௧0௧

எப்பொருளுந் தானு யிலங்குமுனைப் பூசைசெய்யப்
புட்ப மெடுக்கவுந்தான் போமோ நிராமயமே. ௧0௨

கைப்பொருளைத் தேடக் கடலோடிப் போவரென
மெய்ப்பொருளைத் தேடி மெலிந்தே னிராமயமே. ௧0௩

உயிர்க்குளுயி ராயென் னுள்ளுள் ளுலாவியநீ
தயிர்க்குளூறு வெண்ணெயெனத் தானே நிராமயமே. ௧0௪

மூடு முளிருக்கிடையா மூக்குநுனிக் கட்கிடைக்கி
ழூாடுந் திருநடனத் தாட்டம் நிராமயமே. ௧0௫

நீளுங் கரணமுத லெனக்குருகி மட்கினர்க்குத்
தாழா வருணிலையைத் தந்தாய் நிராமயமே. ௧0௬

கொல்லுதற்கு வந்த கொலைஞரெனப் பாவிமன
மல்லுப் பொருதுதற்கேன் வைத்தாய் நிராமயமே. ௧0௭

பல்லுயிரும் போற்றும் பரம பதத்தினர்க்குச்
சொல்லுஞ் செயலுந் தொலையு நிராமயமே. ௧0௮

தன்னை யறிந்தாற் றனக்கொருகே டில்லையெனச்
சொன்ன மொழியே சுகங்கா ணிராமயமே. ௧0௯

புண்ணாய்க் கசிந்துமனம் பூணுகின்ற வன்பருக்குக்
கண்ணீர் கரைபுரளக் கண்டாய் நிராமயமே. ௧௧0

மூன்றாற் சுருதி முறையா லெனையறித
லுன்னை யறிதற் குளவா நிராமயமே. ௧௧௧

அண்டபகி ரண்ட மகண்டபரி பூரணமாய்க்
கொண்டநின்னை யாரறிந்து கொண்டார் நிராமயமே. ௧௧௨

உன்னையன்றி வேறொன் றுளதோவுண் டாயினதை
இன்னதுவா மென்றே யியம்பாய் நிராமயமே. ௧௧௩

நெஞ்சகத்தில் வஞ்ச நெகிழாக்கட் டுண்டவருக்
கஞ்சலென்ன னீயென் றறியாய் நிராமயமே. ௧௧௪

துக்கவலை யற்ற துரியாதீ தத்தினர்க்கு
நற்கவலை தானே நடிக்கு நிராமயமே. ௧௧௫

விண்ணோடு மண்ணுமுதல் வேணதெலா முன்கருணைக்
கண்ணூ டிடைகிடக்கக் கண்டே னிராமயமே. கககரு

நாய்க்கு விருந்தோ நரிக்கோ புழுக்கூடு
தீக்கு விறகோ தெரியே னிராமயமே. ககஎ

ஈக்க ளெறும்புமுத லென்னதுவா மென்னுமுடல்
பேய்க்க டமக்குப்பெறு பேறோ நிராமயமே. ககஅ

விண்ணாதி யாவும் விளங்குவது நீயெனவென்
கண்ணார வுங்கனவு கண்டே னிராமயமே. ககசு

இல்லாமை யில்லாதென் றிதயந் தெளிவதற்கென்
வல்லாண்மை கொண்டு வருமே நிராமயமே. கஉ0

உன்னையன்றி யாவு முளவோவென் றோதியபின்
என்னையென்னத் தில்லைத் திசைப்பாய் நிராமயமே. கஉக

கானற் சலமாங் கவிபாசக் கட்டுண்டார்
தானனே யென்னத் தகுமோ நிராமயமே. கஉஉ

காட்டுக் கொலைவேடன் கைக்குள்சிக்கு மானெனவு
மாட்டித் துயருறவு மாட்டே னிராமயமே. கஉங

கல்லு முருகுமொரு காலத்திலு மென்னிதய
அல்ல விறுவதில்லை யையா நிராமயமே. கஉச

காயக் கருவி கரணமுதற் காயவைத்த
நேய ருளத்தி னிறைவே நிராமயமே. கஉரு

பல்லா யிரங்கோடி பகிரண்ட மும்மெவையும்
எல்லா முனதடிக்கா னென்றாய் நிராமயமே. கஉசு

எனக்கோர் நிகருமில்லை யில்லாரில் வல்லாரில்
உனக்கோர் நிகரொருவ ருண்டோ நிராமயமே. கஉஎ

செப்பஞ் செயுஞ்செயலுட் சிந்தித்தல் வந்தித்தல்
எப்போ தெனைவிட் டியங்கு நிராமயமே. கஉஅ

நீராற் றிரள்குமிழி நேர்மைதரு மிவ்வுடலம்
யாரார்க்குக் கைகொடுத்த தையா நிராமயமே. ௧உ௯

ஒன்றாய்ப் பலவா யுருவருவா யும்முயிராய்
நின்றவனை யாரறிய நின்றாய் நிராமயமே. ௧௩0

பெற்றெடுத்த மாதா பிதாக்களிருந் தாலுமெனைச்
செத்தவுடன் மண்ணிற் றிணிப்பார் நிராமயமே. ௧௩௧

எந்த முயிர்க்கே யமனாய் வரும்பாச
பந்த மகலமுகம் பாராய் நிராமயமே. ௧௩௨

அபய மெனைக்காப்ப தண்ணலே யுன்கடமை
உபய மினியொருவர்க் குண்டோ நிராமயமே. ௧௩௩

என்னை யுனதடிக்கீ ழிசைத்தாட்கொண் டாளாத
வின்னலையே யெண்ணி யினைத்தே னிராமயமே. ௧௩௪

நாமவத்தை யற்ற நவநாத சித்தர்தமைக்
காமக் கரைபுரளக் காணே னிராமயமே. ௧௩௫

தேங்காய்க் கிளநீர் செழிப்பிற் றிரட்சிதரப்
பாங்கா யருளுவதுன் பார நிராமயமே. ௧௩௬

கன்னலென வின்பங் கனிந்தொழுகு முன்னடிக்கென்
றன்னாலு மென்னபலன் றாயே நிராமயமே. ௧௩௭

அமையா மனமமைந்த யருட்கடிமைப் பட்டவரை
எமனாலு மென்செயலா மெந்தாய் நிராமயமே. ௧௩௮

ஒன்றுக்கு மெட்டா துறைந்தசுயஞ் சோதியுய
ரண்டர்க்கு மெட்டாதென் றறிந்தே னிராமயமே. ௧௩௯

வஞ்சமின்றி யென்னை வழிப்படுத்தி வைக்கவுனை
யஞ்சலற நானடைந்தே னையா நிராமயமே. ௧௪0

தாயனைய வின்பந் தருபேரின் பக்கடலில்
வாய்மடுக் கிற்றாகம் வருமோ நிராமயமே. ௧௪௧

முன்னா ளெமக்கிருந்த மூதறிவினோர் வசனஞ்
சொன்னா லதுவே சுகங்கா ணிராமயமே. ௧௪௨

அட்டதிக்கு மண்விண் ணடங்கும் பெருவெளியில்
நட்ட நடுவிருந்த நாதா நிராமயமே. ௧௪௩

தீது நலமுதலாஞ் செய்கை யகலவைத்தால்
ஈதொன்றும் போதுமெனக் கெந்தாய் நிராமயமே. ௧௪௪

கெர்ப்பத்தி லென்னைக் கிடத்தியமு தூட்டுமுனக்
கொப்புவமை யாரென் றுரைப்பே னிராமயமே. ௧௪௫

எவ்வுலகு மேவற் கிணங்காதோ நின்னருடான்
செய்விக்கப் பட்டோர்க்குச் செப்பாய் நிராமயமே. ௧௪௬

தன்றேசம் விட்டுத் தனித்த தபோதனர்க்குச்
சென்றுழி யெல்லாஞ் சிறப்பா நிராமயமே. ௧௪௭

சிந்தைக் கலக்கஞ் சிதறிவிடச் செய்வதுவே
எந்தத் தவத்தினுநன் றெந்தாய் நிராமயமே. ௧௪௮

தேடுவது நாடுவதுஞ் சிந்தைத் திருநடன
மாடுவது முன்னடியார்க் காசை நிராமயமே. ௧௪௯

கண்ட பகலிரவுங் காணார்க்குஞ் சூரியனா
ரென்றெழுநா மென்ன வியம்பாய் நிராமயமே. ௧௫0

செத்த சவமென்றுஞ் சின்னஞ் சிறியரென்றும்
மூத்தார்க் கிருக்கு முறைகா ணிராமயமே. ௧௫௧

சட்ட ரசங்கள்முதற் சருவவில் லங்கசுத்தி
இட்டார்க் குனதருள்வந் தெய்து நிராமயமே. ௧௫௨

ஆகமத்துக் கெட்டா வகண்டபரி பூரணமாம்
ஏகவெளி யன்றோ வியம்பாய் நிராமயமே. ௧௫௩

தேக முடையுமெனத் தேர்ந்த மனத்தினர்போற்
பாகபக்கு வத்தைப் படையே னிராமயமே. ௧௫௪

நாழியுப்பு நாழியப்பும் நாழியாந் தன்மையுமூப்
பாழெழுந்தி ரூர்க்கோ பகராய் நிராமயமே. க௫௫

கொத்தோ டடிமை குடியாக வென்றனையுன்
பத்தருக் கென்றோ படைத்தாய் நிராமயமே. க௫௬

எந்த வுயிரு மெமதுயிரென் றெண்ணியெண்ணிச்
சிந்தை தெளியவருள் செய்வாய் நிராமயமே. க௫௭

அந்திபக லற்ற வகண்டிதா காரமுமென்
புந்தி வெளிக்குட் புகுமோ நிராமயமே. க௫அ

உள்ளுள் ளுயிரா யுறைந்த வுனைத்தொழவே
பள்ளி யறையேன் பகராய் நிராமயமே. க௫௯

மேலிட்ட வாணவத்தை மெலியவிட்ட மேலவர்க்கு
மூலத் தெழுந்த முனையே நிராமயமே. க௬0

மூலமுத லாறுதல முட்டிநின்ற குண்டலியின்
பாலிற் கதித்தேகப் படுமோ நிராமயமே. க௬க

பஞ்சசுத்தி செய்த பழவடியா ரென்னவுன்னை
யஞ்சலி செய்தே யடைந்தே னிராமயமே. க௬உ

தொண்டர்பணிக் காளாய்ச் சுதைப்படுத்தி விட்டுவிடற்
கென்றிரங்கு வாய்கருணை யெந்தாய் நிராமயமே. க௬௩

ஓவியத்தைப் போலே யுறைந்த மனத்தினரென்
னுவிக் குறுதுணையா மையா நிராமயமே. க௬௪

விரிந்த சரியைமுதன் மேவிநின்ற மெய்ஞ்ஞானக்
கரும்புமுதற் கண்டெனவுங் கண்டே னிராமயமே. க௬௫

அஞ்ஞானம் விட்டே யறந்தாங்கி வந்தவர்க்கு
மெய்ஞ்ஞானந் தானே விளங்கு நிராமயமே. க௬௬

தின்றுடுத்திப் பூண்டு திரியவெனப் பாவிமனச்
சண்டி புரளச் சரியோ நிராமயமே. க௬௭

எம்மா லிசைந்த விருவினையும் போகவிட்டுச்
சும்மா விருக்கச் சுகந்தா னிராமயமே. ௧௬௮

பாசவினை யெல்லாம் பறந்திடமெய்ஞ் ஞானவைவாள்
வீசவரு டானே விளக்காய் நிராமயமே. ௧௬௯

தன்னி லிருந்த தலைவன் றனையறியா
தென்னையறிந் தென்னபல னெந்தாய் நிராமயமே. ௧௭0

உன்னை மறப்பிக்க வுருவெடுத்த வாணவப்பேய்
தன்னை மறப்பிக்கத் தகாதோ நிராமயமே. ௧௭௧

இல்லாத மாயை யெனைத்தொடரா வண்ணமொரு
சொல்லருள் செய்யென் றுரையே நிராமயமே. ௧௭௨

துர்க்குணமே கொண்ட தொழும்பனியான் றொல்லுலகிற்
சற்குணத்த ரென்போலுங் காணே னிராமயமே. ௧௭௩

பொல்லாவென் னெஞ்சம் புழுங்க வருகவலை
சொல்லுக் கடங்காச் சுகங்கா ணிராமயமே. ௧௭௪

அலையு மனத்தை யகத்தடக்கு மன்பருளம்
உலையி னிடுமெழுகொப் பாம் நிராமயமே. ௧௭௫

எழுகடலு மோர்கடுகி னிடையிறுத்தக் கற்றாலும்
வழுவு மனத்தினர்க்கு வாயே னிராமயமே. ௧௭௬

போருக்கே வந்தெதிர்த்த போக்கிரிபோ லென்னிதயம்
தீரம்பே சுவதென்ன செய்வே னிராமயமே. ௧௭௭

சோம்பே றிகள்போற் சுருண்ட மனத்தினர்க்குக்
காம விகாரங் கசப்பாம் நிராமயமே. ௧௭௮

ஒழியாப் பிரபஞ்சத் துறவை மறவார்க்குக்
கழியிற் படுநாரைக் கதிகா ணிராமயமே. ௧௭௯

புந்தி யிதமிதப் பூட்டுவிட்ட போகர்தமக்
கந்தி பகலுமென் னையா நிராமயமே. ௧௮0

நானே நெருப்பாறு நடக்குமயிர்ப் பாலமும்யான்
றானே யெனுமறிவைத் தாராய் நிராமயமே. கஅக

மின்னனைய பொய்யுடலை மெய்யென்று பொய்யரினி
என்ன கதிபெறுவா ரெந்தாய் நிராமயமே. கஅஉ

கருவிப் பெருவெளியிற் கருத்தைச் செலுத்தாருக்
கருவி சொரியவரு ளாங்கா ணிராமயமே. கஅந

தேயாப்பஞ் சாக்ஷரவா டீட்டுந் திறத்தினர்க்குக்
காயா புரிக்கோட்டை கனங்கா ணிராமயமே. கஅச

பூமிப் பரப்பைவலம் போய்வரினும் பாவிகளைக்
காம வினையகலக் காணே ணிராமயமே. கஅரு

கோணற் கருப்பிரசங் கோணாது கொள்கையென்றன்
ஆணவத்தி லூந்த னறிவா ணிராமயமே. கஅசா

கானலைநேர் பொய்யுடலைக் கல்லாகக் கண்டவர்க்கு
நாணுமை நின்றே நடிக்கும் நிராமயமே. கஅஎ

சலக்குமிழி போன்றவென்றன் சிற்றுடற்கு மித்தனையோ
கலக்கமதை வைத்தாயென் கண்ணே நிராமயமே. கஅஅ

பொய்வாழ்வை நம்பும் புலையர் தமக்குனது
மெய்வாழ்வு வந்து விடுமோ நிராமயமே. கஅகூ

கனக்கு மிருவினையாங் காவடியைத் தூக்குவதற்
கெனக்குமுடி யாதினிமே லெந்தாய் நிராமயமே. ககூO

துறவின்றிச் செய்வினையின் றொகைப்பலனே தென்பவர்க்கு
நரகசொர்க்க மென்றே நவின்றாய் நிராமயமே. ககூக

காதொடுகண் வாய்மூக்குங் கண்டமெய்யோ டையறிவும்
வாதாடுதற்கோ வளர்த்தே ணிராமயமே. ககூஉ

மாதா பிதாவும் வருந்தி வருத்திவைத்த
போதனையைப் பார்க்கிற் பிழைகா ணிராமயமே. ககூந

செல்லு மளவுஞ் செலுத்துகின்ற சிந்தையினோர்க்
கல்லும் பகலுமறு மையா நிராமயமே. கசுச

வேதச் சுமையதனை வீம்புக் கெடுத்தவுடன்
மாதவத்திற் கெங்கே வலையும் நிராமயமே. கசுரு

நரம்பென்பு தோலா னடிக்கின்ற பாவைதனிற்
குரும்புமுத லெல்லாங் குடிகா ணிராமயமே. கசுசு

ஆலத்து ளிச்சை தொலைத்தோரிஞ் ஞாலமுதல்
ஆலத்துக் கொப்பென் றறைந்தாய் நிராமயமே. கசுஎ

வானேற நூலேணி வைத்தாற்போ லுன்னடிபால்
நானேறு வேனென்ற நாட்டம் நிராமயமே. கசுஅ

மைந்தர்களைப் பெற்று மறலிக்களித் தாரெனவென்
சிந்தைநெருப் பாயெரியச் செய்தாய் நிராமயமே. கசுகூ

நாலுதிக்கி னும்விஜய நாட்டுமன்னர் கோட்டையெல்லாம்
பாலர்மணற் சோற்றின் படியாம் நிராமயமே. உ00

பாட்டைப் படித்ததனுற் பகர்ஞான வானென்ப
தேட்டுச் சுரைக்காய்க் கியல்பாம் நிராமயமே. உ0க

நின்ன ருளன்றி நிறைவுகுறை வென்பாருக்
கென்ன கதிமுடிவி லெந்தாய் நிராமயமே. உ0உ

தேகாபி மானத் திரைகடந்த தேசிகர்க்கு
மோகங்க ளெங்கே முயலும் நிராமயமே. உ0௩

சித்தந் தெளிந்த சிவஞா னியருலகப்
பித்த ருறவைப் பிடியார் நிராமயமே. உ0ச

புத்தி தெளியாப் புலத்தோர் தமைத்தவத்துன்
மத்த மனுஷரென மாட்டே னிராமயமே. உ0ரு

தொல்லைப் பெறுமல்லற் றொலைத்தாருக் கேதொன்றுஞ்
சொல்லத்தா னுண்டோதான் சொல்லாய் நிராமயமே. உ0சு

போக்கும் வரத்துமெல்லாம் பொய்யென்ற புண்ணியர்க்கு
நீக்கு மருளுண்டோ நிகழ்த்தாய் நிராமயமே. ௨௦௭

எத்தனையோ கற்று மிதயந்தெளி யாதிருந்த
பித்தருட னேசம் பிழைகா ணிராமயமே. ௨௦௮

வஞ்சப்ர பஞ்ச மயக்கொழிந்தா லல்லாதுன்
அஞ்சலெனும் பேரருளி லாகே ணிராமயமே. ௨௦௯

அண்டி யிருவினைப்பே யண்டா தடிப்பவர்க்குத்
தொண்டுசெய்வார்க் கன்றோ சுகங்கா ணிராமயமே. ௨௧௦

என்னெஞ்சந் தானே யெனைக்கெடுக்கு மின்னுமெனைச்
சின்னப்படுத்தி லென்ன செய்வே ணிராமயமே. ௨௧௧

மூடு மெனதறிவே மூடி யிருந்தாலுன்
ஆடுமறி வெங்கேநின் றூடு நிராமயமே. ௨௧௨

ஓடியே யுள்ளமட்டு மோடி யிதயம்மயங்கி
வாடியே நின்சமுகம் வந்தே ணிராமயமே. ௨௧௩

முட்டா ளெனும்பட்ட முழுதுமெனக் கீயவுனக்
கிட்ட மிருந்தா லியம்பாய் நிராமயமே. ௨௧௪

ஆலமுறுந் தூல மனித்தியமென் போர்க்காசை
மாலெங்கே நின்று வருங்கா ணிராமயமே. ௨௧௫

ஆர்ப்புக் குயிரான தண்டபகி ரண்டமுமாந்
தாற்பரியஞ் சொல்லத் தகுமோ நிராமயமே. ௨௧௬

எண்டிசையுந் தானு மியங்கு முனைத்தொழுதற்
கண்ட சராசரநின் றூடும் நிராமயமே. ௨௧௭

காற்றூடி போலக் கருத்துவந்து தேடியுனை
ஆற்றா தயர்ந்தேனென் னையா நிராமயமே. ௨௧௮

எல்லாம் படித்துநடப் பெய்தினரின் புற்றனர்மற்
றல்லாரை யாரென் றறியே ணிராமயமே. ௨௧௯

அன்னைசுற்ற மெல்லா மகலவிட்ட வன்பர்தமக்
கின்ன லகலுமற் றெவர்க்காம் நிராமயமே. உஉ0

சாருதனீ யன்றியில்லைச் சத்தியா மென்மனத்தை
ஆராய வேண்டாமென் னரசே நிராமயமே. உஉக

தத்து மனத்தினர்க்குத் தாரபலன் போகிறதை
எத்தனையென் றேயுரைப்ப தெந்தாய் நிராமயமே. உஉஉ

கொல்லுங் கொலைக்கஞ்சாக் கொலைஞனெனும் பாவிமனத்
தொல்வினையைத் தீர்க்கச் சுகங்கா ணிராமயமே. உஉ௩

உன்னையின்றி யென்னை யொதுக்கிவைப்ப தெந்தநெறி
அன்னையின்றிச் சேய்தானுண் டாமோ நிராமயமே. உஉச

பொங்கு கருணைப் புறஞ்சுழித்தாற் கள்ளமன
வங்கமங்கே யோடி வருங்கா ணிராமயமே. உஉரு

கல்லாத கல்வியெல்லாங் கற்றுமுயர் ஞானகலை
இல்லார்க்கு மின்பமிலை யேதோ நிராமயமே. உஉசா

விளக்குஞ் சுடரினையும் வேறுவே றென்னுருக்
குழக்குளப்பு முப்பெனவு மொன்று நிராமயமே. உஉஎ

சார்ந்தோரைத் தூடணிக்குந் தப்பிலிக ளைப்புவியில்
எற்றுன் படைத்ததுதா னெந்தாய் நிராமயமே. உஉஅ

புத்தி யகங்காரம் பூணு மனமிறக்கிற்
சித்த மகத்துவத்தைச் சேரும் நிராமயமே. உஉகூ

நானே திருவடியை நாடுவதுந் தேடுவதும்
ஆறு லதுபெரிதா மையா நிராமயமே. உ௩0

காற்றுத் துருத்தியைந்து கள்வர் புலைக்குடிலே
சோற்று லெடுத்த சுவர்கா ணிராமயமே. உ௩க

மன்னுங் கலைஞான மார்க்கமறிந் தோர்க்குமுறும்
அந்நியங்க ளேது மறியார் நிராமயமே. உ௩உ

சென்னிக் கிசையாச் சிவராஜ யோகநிலை
வன்ன மலர்ப்பதத்தை வைத்தே னிராமயமே. ௨௩௩

சென்ம மெடுத்தாற் செகமாயை விட்டொழிந்து
நன்மை பெறுத னயங்கா ணிராமயமே. ௨௩௪

பாச மறவார் பரமபதத் தினர்போற்
பேசுசிலவர் கூடவுநான் பேசே னிராமயமே. ௨௩௫

நேராம் வழிகாட்டி நிச்சயத்தைச் சொல்லவெனக்
காருன்னை யன்றி யரசே நிராமயமே. ௨௩௬

வாசகத்தின் ஞானமெல்லாம் வந்ததுபோற் பேசியையோ
மோசப் படவு முறையோ நிராமயமே. ௨௩௭

பெட்டி நிறையப் பெருக்கிவைத்த பெட்டகத்தாற்
குட்டிச் சுவரென்றே குறித்தாய் நிராமயமே. ௨௩௮

மனம்பாச மற்றுநிற்க வாயாலுனைப் புகழும்
இனங்கள் முழுதுமெனக் கெதிர்கா ணிராமயமே. ௨௩௯

வாசனையைப் போக்கும் வரமுண் டெனவொருசொல்
நீசருக்கு முண்டோ நிகழ்த்தாய் நிராமயமே. ௨௪௦

அன்னை பிதாவு மணைந்துகுரு வாக்கினைக்கோ
என்னைப் பிறக்கவைத்தா யெந்தாய் நிராமயமே. ௨௪௧

மாதா பிதாவும் மயறீர்ந்த வாற்றினுக்கு
வாதோ வெனைப்பிறக்க வைத்தாய் நிராமயமே. ௨௪௨

பின்னை யொருவர்செய்யும் பிழைக்குப் பரிகாரம்
என்னைத் தெருவில்விட்ட தேன்கா ணிராமயமே. ௨௪௩

தொண்டாசை கொண்டோர் துயிலார் முகத்தணைக்கக்
கண்டுயிலா ரன்பரெனக் கண்டாய் நிராமயமே. ௨௪௪

ஈனத்துக் கேற்றவுட லென்னதென்ன தென்பதுவும்
ஞானத்துக் கேற்றவர்க்கு நன்றோ நிராமயமே. ௨௪௫

ஆசைக் கடலி னலைவாய்ப்பட் டேயலைந்து
மோசப் படுதன் முறையோ நிராமயமே. உசசு

ஈட்டிரண்டு மின்னதென்று மேழையறி யாதபடி
வெட்டவெளிப் பேதையென விட்டாய் நிராமயமே. உசஎ

பித்தம் பிடித்தபிர பஞ்சத்தார் போலன்றோ
முத்தர்க் கிருக்கு முறைகா ணிராமயமே. உசஅ

காமக்கு ரோதமத மாச்சரியக் காரருக்கே
ஆமோ திருக்கருணை யையா நிராமயமே. உசகூ

ஜெகத்து மயமாயுந் தேஜோ மயமாயும்
அகத்து டணுவான தன்றோ நிராமயமே. உரு௦

கேசாதி பாதமுதல் கெர்ப்பக் குவட்டில்வைத்த
ஈசா வுனக்கே யியல்பாம் நிராமயமே. உருக

எக்கலைக்குஞ் சொக்கா தியங்கு முனைத்தொழுதல்
நிற்கவலைக் கெல்லா நிலைகா ணிராமயமே. உருஉ

அகத்து விழியுமறி தற்கரி தாயவுன்பால்
முகத்து விழியோ முயலும் நிராமயமே. உருங

திக்கு விஜயஞ் சிவராஜ யோகியர்க்காந்
துக்க வலையோர்க்குத் துறையோ நிராமயமே. உருச

வாழுகின்றோ மென்றே வலக்காரம் பேசிலையோ
ஏழாம் நரகுக் கிரைகா ணிராமயமே. உருரு

ஈடெனக் காரென்றே யெதிர்பேசு மட்டியுடல்
நீடேழி கால நிலையோ நிராமயமே. உருசு

பாகாய்க் கசிந்துருகும் பரம பதத்தினர்க்குத்
தேசாபி மானமெல்லாந் தீயு நிராமயமே. உருஎ

ஆவியுடல் பொருளுமடங் கக்கொள்ளை கொண்டுமெனைப்
பாவியென்று தள்ளப் படுமோ நிராமயமே. உருஅ

அளந்தாலு மிந்தவுல கவ்வளவு மெவ்வளவும்
உளந்தெளியா ருக்கருடா னுண்டோ நிராமயமே. உ௫க

சொன்ன படிக்கிணங்காத் துட்டன்யா னாகிலுமுன்
வன்ன மலர்ப்பதத்தை வைப்பாய் நிராமயமே. உசுo

பாத முடியின் பரமார்த்த மானவுனக்
கேது வடிவென்றே யிசைப்பே னிராமயமே. உசுக

மூன்று ளிருந்த முறைபோலு மூர்த்திகளாய்
எந்நாள் வருவதெனக் கெந்தாய் நிராமயமே. உசுஉ

மடக்கெடுத்து வீசி மணல்குடித்த நீரதனால்
கடற்குறை யுண்டோவென் கண்ணே நிராமயமே. உசுந

தானேதா னெவ்வுயிர்க்குந் தற்பரமாய் நிற்பதுடல்
ஊனாகிக் கொண்ட வுளவே நிராமயமே. உசுச

பாச மொழிந்துநெறி பற்றிநின்ற வித்தகர்க்கு
வீசுந் திருக்கருணை வீசும் நிராமயமே. உசு௫

கற்றகல்வி யற்று கன்மமுதல் பாசமற்று
உத்தமர்க்குச் சித்த மொடுங்கு நிராமயமே. உசுசு

சித்த நிரஞ்சனத்திற் சென்றிருக்க வல்லார்க்குப்
புத்தி நிருவிகற்பம் பூணும் நிராமயமே. உசுஎ

நீட்டிக் குறுக்க நெடும்பகையென் பாரதுபோற்
காட்டி மறைக்கக் கணக்கோ நிராமயமே. உசுஅ

கற்பூர வுண்டை கரைவதுபோ லக்கரையுந்
தற்போத கர்க்கருளை தந்தா னிராமயமே. உசுகூ

தேனோடு பாகாய்த் திரண்டமுத மென்னவுமென்
ஊனோ டடலோ டுறைந்தாய் நிராமயமே. உஎo

கண்டித்த வெள்ளுங் கரும்பும்போ லும்மெனது
சண்டித்தன மெய்தற்குச் சார்நீ நிராமயமே. உஎக

ஐந்துபுல வேடருக்கே யாளாக்கி ஞானுனக்கு
வந்தபல னென்னோ வழுத்தாய் நிராமயமே. உஎஉ

ஓயாக் கவலைக் குரித்தாம் புழுக்குரம்பை
ஆயே னெனவகுத்த தையா நிராமயமே. உஎங

ஐவர்க்கு மென்னை யடங்கச்சிறை யாக்குவது
உய்யுங் கருணைக் குளதோ நிராமயமே. உஎச

ஊசிதனைக் காந்த முகந்தணைக்கு மாறெனவே
பாசத்தைப் போக்கியருள் பாராய் நிராமயமே. உஎரு

உள்ளந் தெளிந்தே யொளியாய்ப் பிறங்கினர்க்குக்
கள்ளந்தெளி யக்கனவு கண்டே னிராமயமே. உஎசு

அற்புதமே நிர்க்குணமே வன்பர்க் கருள்புரியுஞ்
சற்குருவே யெங்கள் சனுவே நிராமயமே. உஎஎ

அழியா வருள்வாரி யள்ளியடி யேன்றனக்கா
மழையாய்ப் பொழிந்தாய்நீ வாழி நிராமயமே. உஎஅ

முத்தர்க்கும் வாழியெங்கள் முன்னோர்க்கும் வாழியருள்
வித்தகரும் வாழியெங்கும் விளங்கும் நிராமயமே. உஎகூ

ஒழியா வருள்வாழி வுத்தமர்க ளும்வாழி
அழியாப் பதிவாழி யையா நிராமயமே. உஅ0

குன்றாக் குணங்குடிகொண் டோராமெம் வித்தகரும்
எந்நாளும் வாழியரு ளெந்தாய் நிராமயமே. உஅக

நிராமயக்கண்ணி முற்றுப்பெற்றது.

ஆக பாடல்-ருசுங.



# பராபரக்கண்ணி.

அண்ட புவனமென்று மாடுதிருக் கூத்தினையான்
கண்டு மகிழ்ந்திடவே காட்டாய் பராபரமே.

ஆதியா யாண்டவனா யஃததுவாய் நின்றபெருஞ்
சோதியாய் நின்மலமாய்ச் சூழ்ந்தாய் பராபரமே.

வேத மறைப்பொருளை வேதாந்த துட்கருவை
ஓதி யுனையறிந்தா ருண்டோ பராபரமே.

அண்ட புவனமுட னாகாச மென்றுசும்பிக்
கொண்ட மெய்ஞ்ஞானக் கூத்தே பராபரமே.

நாவாற் புகழ்க்கெட்டா நாயகனே நாதாந்தப்
பூவாய் மலர்ந்திருக்கப் பூத்தாய் பராபரமே.

பேராற் பெரிய பெரும்பொருளே பேதைதனக்
காரா ரிருந்தும்பல னாமோ பராபரமே.

மாறாய நற்கருணை மாவருள்சித் தித்திடவே
பாராயோ வையா பகராய் பராபரமே.

ஆனாலு முன்பாதம் யாசித் திருப்பதற்குத்
தானா யிரங்கியரு டாராய் பராபரமே.

நாதாந்த மூல நடுவீட்டுக் குள்ளிருக்கு
மாதவத்தோர்க் கான மருவே பராபரமே.

உடலுக் குயிரேயென் னுள்ளமே யுன்பதத்தைக்
கடலுமலை யுந்திரிந்துங் காணேன் பராபரமே.

மாந்திரத்துக் கெட்டா மறைப்பொருளே மன்னுயிரே
சேர்ந்தவெழு தோற்றத்தின் சித்தே பராபரமே.

தனியேனுக் காதரவு தாரணியி லில்லாமல்
அனியாய மாவதுனக் கழகோ பராபரமே. ௧௨

ஓடித் திரிந்தலைந்து முன்பாதங் காணமல்
வாடிக் கலங்குகிறேன் வாராய் பராபரமே. ௧௩

ஆராதி ஆரந் தொலைத்துமதி னுன்பாதம்
பாரா தபாவத்தாற் பயந்தேன் பராபரமே. ௧௪

தேடக் கிடையாத திரவியமே தேன்கடலே
ஈடெனக்கு முண்டோ விறையே பராபரமே. ௧௫

அரிய பெரும்பொருளே யன்பா யொருவார்த்தை
பரிபூ ரணமாய்ப் பகராய் பராபரமே. ௧௬

ஐயோ வெனக்குதவு மாதரவை விட்டுவிட்டுத்
தையலரைத் தேடித் தவித்தேன் பராபரமே. ௧௭

எத்திசையு நோக்கி னிசையாத் திருக்கூத்தாய்
வித்தைவிளை யாட்டு விளைப்பாய் பராபரமே. ௧௮

எப்பொழுது முன்பதத்தி லென்கருத்தே யெய்துதலுக்
கிப்பொழுதே கைப்பிடித்தா ளிறையே பராபரமே. ௧௯

வாதுக் கடாவரும் வம்பரைப்போற் ருேஷிமனம்
ஏதுக் கெதிர்வயா னெளியேன் பராபரமே. ௨0

கண்ணே மனோன்மணியே கண்பார்வைக் கெட்டாத
விண்ணடங்கா வெட்ட வெளியே பராபரமே. ௨௧

அடக்கவரி தாமாயி லைம்பொறியைக் கட்டிப்
படிக்கப் படிப்பெனக்குப் பகராய் பராபரமே. ௨௨

எத்தவங்கள் செய்தாலு மின்பமுட னுன்பதத்தை
முத்த ரொருபோது முற்றார் பராபரமே. ௨௩

சொல்லுக் கிணங்காத சூத்திரத்தைப் பார்த்திருக்க
அல்லும் பகலுமெனக் காசை பராபரமே. ௨௪

நாற்றச் சடலமதை நம்பார் முகந்திருக்கப்
பூத்து மலர்ந்திருக்கும் பூவே பராபரமே. உ௫

சோற்றுப் பொதியைச் சுமந்தே திரிந்தலைந்தே
ஆற்றும வின்றுகளைத் தழுதேன் பராபரமே. உ௬

காற்றுத் துருத்திதனைக் கல்லா யணைந்திருக்கச்
சூத்திரமாய் நின்றாய் சுழியே பராபரமே. உ௭

கோலத் திருவடிவு கோதையர்க ளாசையினால்
ஆலைக் கரும்புபோ லானேன் பராபரமே. உ௮

கேளாயோ வென்கவலை கேட்டிரங்கி யடிமைதனை
யாளாயோ வையாபா ழானேன் பராபரமே. உ௯

எத்தனைதான் குற்ற மெதிர்த்தடிமை செய்தாலும்
அத்தனையு நீபொறுப்ப தழகே பராபரமே. ௩0

அல்லல் வினையா லறிவுகெட்ட வான்மாவாய்
நெல்லும் பதருமென நின்றேன் பராபரமே. ௩௧

சொல்லரிய ஞானச் சுடரே யொருவார்த்தைச்
செல்வம் பொழிந்திடநீ செப்பாய் பராபரமே. ௩உ

நித்த முனைத்தொழா நிர்மூட ளுயிருக்கும்
பித்தனு யேன்காண் பிறந்தேன் பராபரமே. ௩௩

உற்றார்க ளாலு முறவின்முறை யோராலும்
பெற்றார்க ளாலுமுனைப் பிரிந்தேன் பராபரமே. ௩௪

ஏழை முகம்பார்த் தெளியேனை யெப்பொழுதும்
ஆழாம லாண்டருளென் னழகே பராபரமே. ௩௫

பாவ வுடலெடுத்துப் பாதகனு யான்பிறந்துள்
ளாவி கெடுவதுனக் கழகோ பராபரமே. ௩௬

வாராயோ வென்னிடத்தில் வந்தொருக்கா லென்றன்முகம்
பாராயோ சற்றே பகராய் பராபரமே. ௩௭

பார்க்கப் பலவிதமாய்ப் பல்லுயிருக் குள்ளிருந்தும்
ஆர்க்குந் தெரியாம லானாய் பராபரமே. ௩௮

ஆனாலும் பொல்லா தரும்பாவி யாகவுடல்
ஏனோ வெடுத்தேனோ னெந்தாய் பராபரமே. ௩௯

கர்ப்பூர தீபக் கனலொளிபோற் காட்சிதர
முப்பாழும் பாழாய் முடித்தாள் பராபரமே. ௪0

கரும்பே நவரசமே கடலமுதே கண்மணிக்குள்
அரும்பொருளாய் நின்ற வழகே பராபரமே. ௪௧

ஏழை யடியேனை யெப்படியுங் கைப்பிடித்து
ஆளா திருப்பதுனக் கழகோ பராபரமே. ௪௨

ஆளாயோ வையா யடியேன் பிதற்றுதலைக்
கேளாயோ வென்றன் கெதியே பராபரமே. ௪௩

ஊனாகி யுள்ளுயிரி லொட்டாத வக்கருவாய்த்
தானாகி நின்ற தனுவே பராபரமே. ௪௪

பொன்னான் மயக்கெடுத்துப் புத்திகெட்டு நானெனவே
பன்னாளு நின்றாற் பலனோ பராபரமே. ௪௫

இல்லல்லா கூவென் றெனைமறந்து கொண்டெனையே
சொல்லவருண் மெய்ஞ்ஞானச் சுடரே பராபரமே. ௪௬

ஐயோ வடிமைதனக் காரிருந்து மென்னபலன்
கையாற் கவிந்தணைக்கக் காணேன் பராபரமே. ௪௭

ஆனாலு மேழை யடியேனுக் காதரவாய்த்
தானா யிரங்கியரு ளாராய் பராபரமே. ௪௮

தூங்கி யிருந்து தொழுவோர் முகம்பார்க்கும்
வேங்கைப் புலியாக்கு விப்பாய் பராபரமே. ௪௯

கண்ணே கருத்தேயென் கண்மணியே கண்ணிறைந்த
விண்ணடங்கா வெட்ட வெளியே பராபரமே. ௫0

காசாசை கொண்டு கலங்கியே கெட்டலைந்த
தோஷியாய் நின்றேன் துணையே பராபரமே. ௫௧

ஐயோ வெனதுதுய ராரிடத்திற் சொல்லிநின்று
கையெடுக்கப் போறேனென் கண்ணே பராபரமே. ௫உ

என்னதான் செய்திடுவே னென்விதியைச் சொல்லியழ
வுன்னையன்றி வேறெனக்கு முண்டோ பராபரமே. ௫௩

முக்கண் விழியொளியே முத்திதரு முத்தமனே
அக்கண் டிறந்தோர்க் கறிவே பராபரமே. ௫௪

முப்பாழும் பாழாகி முத்திபெற் றிருக்கவெனைக்
கைப்பிடிப்ப தெப்போதென் கண்ணே பராபரமே. ௫௫

உல்லாச மாக வொளிவு பரந்திடவுன்
செல்வம் பொழிந்திடவே செப்பாய் பராபரமே. ௫௬

மாச்சரியஞ் செய்யு மதமொடுங்கி முத்திபெறக்
காட்சி தருவதெப்போ கண்ணே பராபரமே. ௫௭

சண்டாள னென்றென்னைச் சகலருரை யிட்டாலுங்
கொண்டணைப்ப துன்பாரங் குருவே பராபரமே. ௫௮

முத்திதரு மெய்ஞ்ஞான முச்சுடரைக் காணமற்
செத்திறந்து போனாலென் செய்வேன் பராபரமே. ௫௯

தன்னை யறிந்துணரத் தயையா யொருவார்த்தை
இன்னபடி யென்றே யியம்பாய் பராபரமே. ௬0

கனியேகண் டுன்னுடைய கைப்பிடிப்போ மென்றுசற்றே
எளியேன் முகம்பார்த் திரங்காய் பராபரமே. ௬௧

பாசவினை போக்கிப் பலவினையைப் பாழாக்கி
ஆசைவைப்போர் தங்க ளருளே பராபரமே. ௬உ

ஆளவரு வோமென் றன்பா யொருவார்த்தை
ஏழை முகம்பார்த் தியம்பாய் பராபரமே. ௬௩

நிலைநாட்டுங் காய நிசமென்று நிச்சயித்த
புலையாட்ட லென்றுதள்ளப் போமோ பராபரமே. ௬௪

பார்க்கப் பலவிதமாய்ப் பலசமய மாகவொரு
வாக்கை வெளிப்படுத்தி வைப்பாய் பராபரமே. ௬௫

ஆறு லெளியேனுக் காதரவே யில்லாமற்
போறு லுனக்கழகோ புகலாய் பராபரமே. ௬௬

ஈச்சாப் பெருகிவர நிரம்புமா னந்தவெள்ளம்
பாய்ச்சாயோ வையா பகராய் பராபரமே. ௬௭

எத்தனையோ கெஞ்சு மெளியேன் றனக்குதவி
உற்று ருனைத்தவிர வுண்டோ பராபரமே. ௬௮

கன்ன மிடுங்கருவி கரணமதைச் சுட்டோர்கள்
தன்னுக்குட் டானுந் தனுவே பராபரமே. ௬௯

காயாமற் காய்த்துக் கனிந்து சொரிவதற்கு
மாயமாய்ப் பூத்த மலரே பராபரமே. ௭0

உயிருக் குயிரான வுட்கருவுக் குள்ளமைவே
தயையா யெனக்குதவி தந்தாய் பராபரமே. ௭௧

அறிவை யறிவோருக் கானந்த வெள்ளமதாய்க்
கரையறவே பொங்குங் கடலே பராபரமே. ௭௨

மறைப்பொருளைக் காணு மடையனிவ னென்றியம்பிச்
சிரிப்பார் சிரிக்கிலென்ன செய்வேன் பராபரமே. ௭௩

குறிவிளக்குங் குருவடியைக் கொள்கையுடன் போற்றுமல்
அறிவு மயங்குகின்றே னையா பராபரமே. ௭௪

வல்லாரைக் கெஞ்சி வலியாரைக் கால்பிடித்திட்
டில்லாரை நம்பி யிருந்தேன் பராபரமே. ௭௫

சொல்லும் பதர் ஆற்றிச் சூத்திரத்தைப் பாராமற்
கல்லுநெல்லும் போலக் கலந்தேன் பராபரமே. ௭௬

செகமுழுதுஞ் சுற்றியுமுன் சீர்பாதங் காணமற்
றிகைத்தழுதே னீயுந் தெரிவாய் பராபரமே. ௭௭

கள்ளக் கருத்துகளைக் கட்டோ டறுத்தவருக்
குள்ளிருக்கு மெய்ஞ்ஞான வொளியே பராபரமே. ௭௮

கும்பிக் கிரைவிரும்பிக் கொடுப்பார் தமைத்தேடிச்
சம்பித் திரிந்தே சலித்தேன் பராபரமே. ௭௯

காண்கலா வாசை கடித்தாலென் கான்முகமும்
வீங்காதோ வையா விதியே பராபரமே. ௮0

தூங்காமற் றூங்கித் தொழுதிருக்க வென்னுடைய
ஆங்கார மெல்லா மகற்றாய் பராபரமே. ௮௧

தேனமிர்த மூறத் திவ்யமது ரஞ்சொரியத்
தானு மொருவார்த்தை தாராய் பராபரமே. ௮௨

சாத்திரங்க ளோதுஞ் சதுர்மறையோர்க் கெட்டாத
சூத்திரமாய் நின்ற சுழியே பராபரமே. ௮௩

வேற்றொருவர் காணாத வேதாந்தத் துட்பொருளைப்
பார்த்தோர்க ளெய்தும் பலனே பராபரமே. ௮௪

சாதி சனத்துடனே சார்ந்திருந்து பட்டதுயர்
போதும்போ தும்போதும் போதும் பராபரமே. ௮௫

உற்றாரை நம்பியிருந் தொருபலனுங் காணமற்
செத்தா லெனக்கதுதான் சின்னம் பராபரமே. ௮௬

செல்லுமுறையறிந்து சித்திவழி காணமற்
கல்லுமரம் போலானேன் கண்ணே பராபரமே. ௮௭

ஓகோ வுனையறிந்து மொருபலனுங் காணமற்
போகாமற் காத்தருளென் புனையே பராபரமே. ௮௮

உன்னை யறிவதற்கோ வுடலெடுத்தே னென்றென்னைச்
சின்னஞ்சொல் வார்கட்கென் செய்வேன் பராபரமே. ௮௯

தெரியாத வின்பத் தெளிவா யருண்மயமாய்ப்
பரிபூ ரணமுடனே பாராய் பராபரமே. ௯௦

ஆச்சி தனைத்தேடி யாசைவைத் தலையாமற்
பூச்சியா யேனோ பிறந்தேன் பராபரமே. ௯௧

காசை விரும்பிக் கலங்கிநின் றன்பாத
ஆசை விரும்பா தலைந்தேன் பராபரமே. ௯௨

சாகாமற் செத்துதயச் சச்சிதா னந்தமயப்
பாகமா யாகமுகம் பகராய் பராபரமே. ௯௩

வாராயோ வையா வந்திரங்கிக் கொண்டணைக்கப்
பாராயோ சற்றே பகராய் பராபரமே. ௯௪

ஆசைவலைப் பாசநெறி யத்தனையுங் கட்டறுத்து
வாசிதனி லேற்றியெனை வைத்தாள் பராபரமே. ௯௫

வேஷந் தனைப்போட்டு வேதாந்த சாத்திரத்தைக்
காசு பணம்பறிக்கக் கற்றேன் பராபரமே. ௯௬

செய்ததெல்லாங் குற்றஞ் சிறியேன் றனக்கிரங்கிக்
கைதூக்கிக் கொண்டருளென் கண்ணே பராபரமே. ௯௭

மாளா மயக்கறுத்து மனக்கறையைத் தான்கழுவி
ஆளாக்கிக் கொள்வாயென் னையா பராபரமே. ௯௮

நாட்டமங்கு மிங்கிருக்க நாதாந்த முத்திநிலை
காட்டா யணைந்தருளென் கண்ணே பராபரமே. ௯௯

சிந்தை தனைத்தெளிந்து சித்திமுத்தி பெற்றுயர்ந்த
உன்றன் குணங்குடியார்க் குயிரே பராபரமே. ௧௦௦

பராபரக்கண்ணி முற்றுப்பெற்றது.

ஆக பாடல் - ௬௬௫.

## றகுமான் கண்ணி.

பார்க்கப் பலவிதமாய்ப் பல்கவண்டந் தன்னையடை
காக்குந் திருக்கருணைக் கண்ணே றகுமானே.
ஈறு முதலுமற்றே யியங்குகின்ற முச்சுடராய்க்
காரணிக்கும் பூரணமே கண்ணே றகுமானே.
பாணிக்க வொண்ணாப் பதம்பெறுதற் கென்சிரசைக்
காணிக்கை வைத்தேனென் கண்ணே றகுமானே.
பொய்யடிமை யாயினுமுன் பொன்னடிக்கா ளாக்கியெனைக்
கையைக் கொடுத்தணைத்தாள் கண்ணே றகுமானே.
பெண்பிள்ளை யென்றே பிதற்றுதல்பொய் யல்லாமற்
கண்டபல னொன்றுமில்லை கண்ணே றகுமானே.
பேதலித்தே னுன்னடிமை பேதகமில் லாமலுனைக்
காதலித்தே னாண்டருள்செய் கண்ணே றகுமானே.
ஏகப் பெருவெளியி லிருட்கடலிற் கம்பமற்ற
காகமது வானேனென் கண்ணே றகுமானே.
ஐயோ வுனதருளி லாசையற்ற பாவியென்னைக்
பையைநெகிழ்த் தாதருளென் கண்ணே றகுமானே.
போதமய மாகவெங்கும் பூரணித்த காரணத்தைக்
காதலித்து நின்றேனென் கண்ணே றகுமானே.
எல்லார்க் கமுதளிக்கு மியல்புபோற் றேரைகட்குங்
கல்லுள் ளமுதளிக்குங் கண்ணே றகுமானே.
சொல்லுட் பதர்நீக்கிச் சும்மா விருந்தருளைக்
கல்லாருங் கல்லேயென் கண்ணே றகுமானே.
வெட்டவெறும் பாவியென்ன வீணியெனைத் தள்ளாமற்
கட்டியணைத் தாண்டருள்செய் கண்ணே றகுமானே.

யானைரத மேறு மரசர்பெரு வாழ்வுமுதற்
கானற் சலமென்றோ கண்ணே றகுமானே. க௩

ஈவருடமை யும்மெடுத்திட் டென்னுடமை யென்பவர்க்குக்
கபறில் வருந்துணையே கண்ணே றகுமானே. க௪

ஊணெடுத்த நாண்முதலா வுபயோக மற்றயான்
கானினில வானேனென் கண்ணே றகுமானே. க௫

வாசிதனி லேறி மனமகிழ்ந்து வாழாமற்
காசாசை கொண்டேனென் கண்ணே றகுமானே. க௬

வீடோவென் றேகம் விழுமிடந்தான் வீதிகளோ
காடோ செடியோவென் கண்ணே றகுமானே. கஎ

பாகமுடன் வளர்த்த பாழுடறு ஞய்க்கிரையோ
காகங் கழுக்கிரையோ கண்ணே றகுமானே. க௮

ஏங்காம லங்குமிங்கு மேகாந்த மாகவுனைக்
காண்கவந்து யாங்கருள்செய் கண்ணே றகுமானே. க௯

தொண்டுசெய்ய நின்ற துறவியர்க ளேயருளைக்
கண்டுகொள்ளக் கண்டாயென் கண்ணே றகுமானே. உ0

அல்லும் பகலு மடிமைமனந் தேம்புதற்குக்
கல்லுங் கரைந்திடுமென் கண்ணே றகுமானே. உக

வேட்டை பெரிதென்றே வெறிநாயைக் கைப்பிடித்துக்
காட்டிற் புகலாமோ கண்ணே றகுமானே. உஉ

அடைத்த மனக்காட்டை யாருமைந்து கள்வரையுங்
கடத்த முடிவதில்லை கண்ணே றகுமானே. உ௩

மடம்புகு நாய்போல மயங்குமென்னை யுன்னைவிடக்
கடத்துவாரைக் காணேனென் கண்ணே றகுமானே. உ௪

வையம்பொய் யென்றே மறையோல மிட்டதெல்லாங்
கையுமெய்யு மாச்சுதென்றன் கண்ணே றகுமானே. உ௫

சொல்லரு மெய்ஞ்ஞானச் சுடரொளிகண் டாலென்மனக்
கல்லுங் கரைந்திடுமென் கண்ணே றகுமானே. உ௬

மாதா பிதாவுமென்னை மயக்கி மயக்கியுன்னைக்
காதலிக்க வொட்டாரென் கண்ணே றகுமானே. உ௭

வெற்றிதரு மெய்ப்பொருளை வேதாந்தத் துட்கருவைக்
கற்றோர்க் கருள்புரியுங் கண்ணே றகுமானே. உ௮

உடையா பரணமென வுன்னியுன்னிப் பாவிமனங்
கடையா விடலாமோ கண்ணே றகுமானே. உ௯

ஓயாக் கவலையினா லுள்ளுடைந்து வாடுதற்கோ
காய மெடுத்தேனென் கண்ணே றகுமானே. ௩௦

நேசம்வைத்த துன்னடிமை யின்பதத்திற் கல்லாது
காசுதனக் கோவென் கண்ணே றகுமானே. ௩௧

எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணியெண்ணி யுன்னடிமை
கண்ணிக்குட் சிட்டானேன் கண்ணே றகுமானே. ௩௨

பொய்யெடுத்தா னென்று புறக்கணித் தாயாகிலென்னைக்
கையணைப்பா ருண்டோவென் கண்ணே றகுமானே. ௩௩

விண்ணாடர் காணா விரிகருணைச் செஞ்சுடரைக்
கண்குளிரத் தந்தருள்செய் கண்ணே றகுமானே. ௩௪

தங்குபே ரின்பமதைச் சார்ந்தகுரு நாதனுக்கே
கங்குல்பகற் றானுமென் கண்ணே றகுமானே. ௩௫

தூங்காமற் றூங்கித் தொழுதுதொழு துன்னருளைக்
காண்க வெனக்கருள்செய் கண்ணே றகுமானே. ௩௬

இன்றுள்ளோர் நாளைக் கிருப்பதுபொய் யென்பதையான்
கண்டுகொண்டே னையாவென் கண்ணே றகுமானே. ௩௭

பீற்றற் றுருத்திதனைப் பீக்குழியைச் சாக்கடையைக்
காத்தேன் வளர்தேனென் கண்ணே றகுமானே. ௩௮

போதத் தனம்படைத்த புல்லர்க் கிருப்பூசி
காதற் றதும்வருமோ கண்ணே றகுமானே. ௩௯

பாடிப் படித்தறிந்தும் பற்றறூர் பாசமலைக்
காடுகொண்டு போவாரென் கண்ணே றகுமானே. ௪0

நிறைந்தபரி பூரணமே நிர்க்குணமே நிர்மலமே
கருணைக் கடலேயென் கண்ணே றகுமானே. ௪௧

பார்ப்பாயோ வென்றன்முகம் பாவியா காமலெனைக்
காப்பாயோ வையாவென் கண்ணே றகுமானே. ௪௨

மெய்யெடுத்த நாண்முதலா மெய்யறியாப் பாவியெனைக்
கைவிடவும் வேண்டாமென் கண்ணே றகுமானே. ௪௩

சோற்றுப் பொதியைச் சுமந்தே யலைந்துசுழற்
காற்றுத் துரும்பானேன் கண்ணே றகுமானே. ௪௪

சேர்ந்தசுற்றந் தன்னைச் சிதறவிட்ட சிந்தையர்க்குக்
காந்த மலையேயென் கண்ணே றகுமானே. ௪௫

உலையி லிடுமெழுகி னொப்பாக வென்றனுள்ளங்
கலைதலது காரியமோ கண்ணே றகுமானே. ௪௬

ஆவித னைக்குரங்கா வாட்டுகின்ற வையறிவைக்
காவ விடவருள்செய் கண்ணே றகுமானே. ௪௭

வேஷந் தனைப்போட்டு மெய்ம்மயக்கும் பொய்க்குருவாய்க்
காசு பணம்பறித்தேன் கண்ணே றகுமானே. ௪௮

எட்டிப் பிடிக்கும் விதமறிந்தா லுன்பதத்தைக்
கட்டிப் பிடித்திடுவேன் கண்ணே றகுமானே. ௪௯

அவியா மனமவிய வாயுங்கலை யோர்கடமைக்
கவியுந் திருக்கருணைக் கண்ணே றகுமானே. ௫0

சித்திதரும் வேதாந்தச் செழுஞ்சுடரைச் சின்மயத்தைக்
கற்றவர்க்கு முத்திதருங் கண்ணே றகுமானே. ௫௧

அருவி சொரியும்படிக் கம்பரத்தி லன்புவைத்தாற்
கருவி பிரியாதென் கண்ணே றகுமானே. ருஉ

மாராய வெள்ள மருங்கமிழ்ந்த நின்கருணைக்
காரார் மழைபொழியுங் கண்ணே றகுமானே. ருங

எண்படா தெண்ணமெல்லா மெண்ணியெண்ணி நெஞ்சமொரு
கண்படா தலங்குவதோ கண்ணே றகுமானே. ருச

கோலங் குறியில்லாக் குருவடிதொ ழார்கண்மனங்
கால னிருப்பிடமோ கண்ணே றகுமானே. ருரு

உள்ளுயிரி னுள்ளே யுறைந்தபரஞ் சோதிவரிற்
கள்ளமனந் துள்ளாதென் கண்ணே றகுமானே. ருசு

சேர்க்குந் திரவியமுஞ் சித்ரமணி மண்டபமுங்
காக்குந் துணையோவென் கண்ணே றகுமானே. ருஎ

பட்டுடையு மொப்பனையும் பாதகமு மென்னைவிட்டுக்
கட்டோ டொழிவதிலை கண்ணே றகுமானே. ருஅ

எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணு திருக்குமனங்
கண்ணாடிக் குண்முகமாங் கண்ணே றகுமானே. ருகூ

மண்டபமுந் தண்டிகையு மாளிகையுஞ் சாளரமுங்
கண்டு களிக்கவருள் கண்ணே றகுமானே. சுO

மன்னுங் கருவி மவுனமணிப் பெட்டகத்தைக்
கன்னமிடப் போமோவென் கண்ணே றகுமானே சுக

என்றுமன்னை சுற்றமுத லெற்குப்பழி காரரெனக்
கண்டறிந்து கொண்டேனென் கண்ணே றகுமானே. சுஉ

கொடிய மனத்துயரைக் கூடா திருப்பவர்க்குக்
கடுக முடுகிவருங் கண்ணே றகுமானே. சுங

ஏச்சு மதிமயக்கு மில்லார்க ளாலுடைதேங்
காய்ச்சிறட்டை யானேனென் கண்ணே றகுமானே. சுச

விள்ளரிய வேதம் விளைவுதலை யுங்கடந்து
கள்ளமனந் துள்ளுவதென் கண்ணே றகுமானே. ௬௪

வேதக் கருவை விளைகருணைக் குஞ்சரத்தைக்
காதலித்தே ஞாதரித்தாள் கண்ணே றகுமானே. ௬௫

அரும்பே மலரேயென் னாசைதரும் வாசனையே
கரும்பே ரசமேயென் கண்ணே றகுமானே. ௬௭

பூரணமே வற்புதமே பொங்குகரு ணைக்கடலே
காரணமே யென்றனருட் கண்ணே றகுமானே. ௬௮

ஓயாதோ வென்கவலை யுன்னருளா லென்கருவி
காயாதோ வையாவென் கண்ணே றகுமானே. ௬௯

ராஜாங்கம் வேண்டி ரதகஜங்க ளேறுதற்குக்
காசெங்குங் கேளேனென் கண்ணே றகுமானே. ௭0

தந்தைதா யென்றே தயங்குகின்ற பாழ்மனத்தைக்
கண்டிறக்க வந்தருள்செய் கண்ணே றகுமானே. ௭௧

அச்சமெமக் கில்லையென வைம்புலனும் பாழ்மனத்தைக்
கைச்சூறை யாட்டிவிடென் கண்ணே றகுமானே. ௭௨

இனியவமிர் தம்பொங்கி யெங்குங்கரை தந்திவரக்
கனிவாய் திறந்தருள்செய் கண்ணே றகுமானே. ௭௩

ஆணையிட்டே ஞாணையிட்டே னையனே யுன்னருளைக்
காண வெனக்கருள்செய் கண்ணே றகுமானே. ௭௪

அல்லும் பகலு மறிவிலய மாவோர்க்குக்
கல்லும் பிளந்திடுமென் கண்ணே றகுமானே. ௭௫

புவியு மெழுவானும் பொன்னுலகும் பல்லுயிருங்
கவியுந் திருக்கருணைக் கண்ணே றகுமானே. ௭௬

எண்ணரிய தாக விருந்திடுஞ் சூத்திரமோ
கண்ணிலொளி பாய்ந்ததுவோ கண்ணே றகுமானே. ௭௭

உழையோ வழுக்கோவென் னுள்ளங்கழு வக்கழுவக்
கழுவாத் தொடக்கோவென் கண்ணே றகுமானே. எஅ

உற்ற கிளைத்திரை யுறவின் முறைத்திரையுங்
கத்தரித்து விட்டருள்செய் கண்ணே றகுமானே. எகூ

நற்பவளக் கொம்பே நவமணிக்கு மற்புதமே
கைப்பொருட்கு மெய்ப்பொருளே கண்ணே றகுமானே. அ0

ஒப்புரவுதப்பி யுணர்வற் றனைக்கை விட்டுக்
கப்பரைகைக் கொண்டேனென் கண்ணே றகுமானே. அக

பசப்பிப் பணம்பறிக்கும் பாவிக் குருமுகத்தைக்
கசப்பாகக் கண்டேனென் கண்ணே றகுமானே. அஉ

வேதியர்க்கு மாதவர்க்கு மெய்யடியார் கட்குமுனைக்
காதலிப்போ ருக்குமருள் கண்ணே றகுமானே. அங

வேரைவே ரோடறுத்து மெய்யடிமை யாக்குதற்கென்
காரியத்திற் றாமதமென் கண்ணே றகுமானே. அச

பழகப் பழகிவரும் பாக்கியத்தைப் பைமுதலைக்
களவு கொடுக்கேனென் கண்ணே றகுமானே. அரு

நாமாண்மை கண்முழுது நாசமாக் கார்தமக்குங்
காமவினை போமோவென் கண்ணே றகுமானே. அசு

அடிமை யுனதபய மாகா திருக்கினுமென்
கடைவழிக்குங் கட்டமுதே கண்ணே றகுமானே. அஎ

வேதாந்த வேதமெல்லாம் விட்டேறியே கடந்து
காதலித்து நின்றேனென் கண்ணே றகுமானே. அஅ

இனமுஞ் சனமுமென வெண்ணியெண்ணி யுன்னடிமை
கனசழக்குப் பட்டேனென் கண்ணே றகுமானே. அகூ

நவகுத்தி ரத்தைவிட்டு நன்னினைவெண் ணாதுமனங்
கவலைப் படுவதென்ன கண்ணே றகுமானே. கூ0

மடிப்புங் கொலைகளவும் வஞ்சமுமென் னெஞ்சைவிட்டுக்
கடக்க நடப்பதில்லை கண்ணே றகுமானே. கூக

பலவிடத்தைச் சுற்றிப் பாதவித்துப் பாவிமனங்
கலங்கி மயங்குவதென் கண்ணே றகுமானே. கூஉ

உள்ளக் கருத்தா லுவந்துறவு கொள்ளாமற்
கள்ளமனந் துள்ளுவதென் கண்ணே றகுமானே. கூரு

மண்ணுமுதன் மற்ற மயக்கமறக் கல்லாரைக்
கண்ணெடுத்துப் பாரேனென் கண்ணே றகுமானே. கூச

தேசிகனு னென்னுந் திருட்டுக்குருக் கள்சொல்லோர்
காசாய் மதியேனென் கண்ணே றகுமானே. கூரு

தன்னை யறிந்து தவம்புரியாத் தன்மையினுற்
கன்னெஞ்ச னேனென் கண்ணே றகுமானே. கூசு

மாடகூ டங்கண்மணி மண்டபமு மன்றுகளுங்
காடுகொள்ளக் கண்டேனென் கண்ணே றகுமானே. கூஎ

சூரனெரிய வேகதறிக் கூப்பிட்டுங் காணுக்
கருவே குருவேயென் கண்ணே றகுமானே. கூஅ

மருளாத் தவத்தான் மறப்புநினைப் பற்றவர்க்குக்
கருணைக் குணங்குடியாங் கண்ணே றகுமானே. கூகூ

உதிக்கு முணர்வன்றி யுணர்வோ டுணர்வொன்றிற்
கதிக்குங் குணங்குடியென் கண்ணே றகுமானே. க00

றகுமான்கண்ணி முற்றுப்பெற்றது.

ஆூ பாடல்-எகூரு.

# எக்காலக்கண்ணி.

முத்திதரும் வித்தை மூலையில்வைத்துச் சீராட்டி
நித்த மறவாம னினைப்பதினி யெக்காலம்.

ஆதியின்மே லாசை யடர்ந்தெரித்த வக்கினியின்
சோதியினால் வெந்து சுகம்பெறுவ தெக்காலம்.

காமக் கடல்கடக்கக் கர்த்தவியக் கப்பல்வைத்து
நேமநிஷ்டை தம்ப நிறுத்துவது மெக்காலம்.

பங்கப் பழிப்பேய்ந்த பையன்யான் றையலர்கள்
கொங்கையைநான் பாராக் குருடாவ தெக்காலம்.

கொங்கைதனைப் பாராக் குருடா யிருப்பதுடன்
அங்கமுகிழ் மோக மழிவதினி யெக்காலம்.

அங்கமுகிழ் மோக மழிந்தே யறமெலிந்து
வன்கிளடு போல வறண்டுணர்வ தெக்காலம்.

வாசியினா னேறி வலமிடந்தி ருப்பாமற்
றேசிநடை போலத் திடப்படுவ தெக்காலம்.

தேசிநடை போலத் தியங்காச் சுழுமுனையை
நாசி நுனியிலதை நான்மறிப்ப தெக்காலம்.

நாசி நுனிகடந்து நாசமாய்ப் போகாமல்
வாசியுமென் கையில் வசப்படுவ தெக்காலம்.

மையலெனு மாலை மார்புநிறை யப்பூண்ட
தையலர்க ளெல்லாமென் றாயாவ தெக்காலம்.

கஞ்சா வபினாக்குங் கற்பமென வுண்ணாமல்
எண்சாண் பனங்கள் ளிறக்கியுண்ப தெக்காலம்.

பொய்யே மிகுத்த புதர்ப்பாவிப் பையல்யான்
அய்யோவென் றேயழுதுன் னடிபணிவ தெக்காலம். கஉ

அய்யோநகூ வென்றே யலறவடி யுண்டவென்றன்
பொய்யான மெய்யின் பிழையறுவ தெக்காலம். கங

மருவு தகைமறந்து மனமு மதமிறந்து
இருகையு மேந்தி யிரந்துண்ப தெக்காலம். கச

இருகையு மேந்தி யிரந்து குடித்தேநான்
சருகா யுலர்ந்து சலிப்பறுவ தெக்காலம். கரு

ஆசானற் காலை யணைத்திருந்து மோந்துகலந்
தாசாடிப் பேசி யுணர்வருள்வ தெக்காலம். கசு

வாசிவா வென்று வருந்தெள் ளமுதமுண்டு
பேசிநான் வாழ்ந்தே பிழைதீர்வ தெக்காலம். கஎ

எக்காலக்கண்ணி முற்றுப்பெற்றது.

ஆ பாடல் - எஅ0.

# கண்மணிமாலைக்கண்ணி.



அத்து விதமே யறிவகண் டிதாகாரக்
கர்த்த வியமேயென் கண்ணே பராபரமே.

தற்பரமே சிற்பரமே தானென்று நின்றுதவுங்
கற்பகமே யற்புதமே கண்ணே பராபரமே.

உடலே யுயிரே யுளங்குளிர்ந்த செந்தேனே
கடலே நிறையமுதே கண்ணே பராபரமே.

கொட்டிவைத்த முத்தே குவித்தநவ ரத்தினமே
கட்டிப்பசும் பொன்னேயென் கண்ணே பராபரமே.

சட்டரச வர்க்கமே சார்ந்ததோர் குஞ்சரமே
கட்டழகுப் பெண்ணேயென் கண்ணே பராபரமே.

செல்வப் பெருக்கே திரண்டமணிப் பொக்கிஷமே
கல்விக் களஞ்சியமே கண்ணே பராபரமே.

இன்னமுதே கண்டே யெனக்கேற்ற முக்கனியே
கன்னலரும் பாகேயென் கண்ணே பராபரமே.

பேச்சாத் திரண்டமுதே பிரியாப் பெருவாழ்வே
காய்ச்சாச்செம் பொன்னேயென் கண்ணே பராபரமே.

நற்பவளக் கொம்பே நவின்றமணிப் பெட்டகமே
கைப்பொருட்கு மெய்ப்பொருளே கண்ணே பராபரமே.

பட்டைக் கருப்புவட்டே பாணைகொண்ட சர்க்கரையே
கட்டிக் கரும்பேயென் கண்ணே பராபரமே.

துன்பக் கடலைத் தொலைத்தோர் துயர்தீர்க்குங்
கம்பமற்ற பாற்கடலே கண்ணே பராபரமே.

பொய்ப்பொருள்க ளெல்லாம் புறக்கணித்த புண்ணியர்தங்
கைப்பொருள்சித் தித்ததென்றன் கண்ணே பராபரமே. கஉ

பவக்கடலை நீக்கிப் பரிவாய்க் கரையேற்றும்
கவிழா மரக்கலமே கண்ணே பராபரமே. கந

தம்பனங் கொண்டே தரித்துநின்ற வோங்காரக்
கம்பத்தடி யானேயென் கண்ணே பராபரமே. கச

மலிகாதல் கொண்டகையான் மண்ணிற் கவிழ்ப்பதற்கோ
கலகம் விளைத்துவிட்டாய் கண்ணே பராபரமே. கரு

தெள்ளிய வான்சோதி தெளிந்துமெல்ல வந்ததையுங்
கள்ளப் படுத்திவிட்டாய் கண்ணே பராபரமே. கசு

புண்ணீ ரொழுகிப் புழுங்கு மனத்தினர்போற்
கண்ணீர் கலங்கவிட்டாய் கண்ணே பராபரமே. கஎ

பித்தர்கள் போலும் பிதற்றிக்கா கம்மோலுங்
கத்திகத்திச் சாகவிட்டாய் கண்ணே பராபரமே. கஅ

போற்றுமற் சிந்தை பொருதுசமர்க் காற்றுமற்
காற்றாய்ப் பறக்கவிட்டாய் கண்ணே பராபரமே. கக

நெற்பதர்க்கே யொப்பாக நிற்பதற்கோ வென்றலையில்
கற்பித்து விட்டுவிட்டாய் கண்ணே பராபரமே. உ0

சொல்லாச் சுயஞ்சோதிச் சுடர்கொழித்த நெஞ்சுகருங்
கல்லாகச் செய்துவிட்டாய் கண்ணே பராபரமே. உக

அவிழ்ந்தவிழ்ந்து சிந்தையுன்மீ தாசைவைத்த தத்தனையுங்
கவிழ்த்துப்பா ழாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. உஉ

ஓசைமணி மண்டபத்தி னுட்புகா வண்ணமெனைக்
காசினியிற் சுற்றவிட்டாய் கண்ணே பராபரமே. உந

வீண்காத றந்ததல்லால் வேற்றிலுனைக் கண்ணுறலுங்
காண்கவரி தாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. உச

சேத்துமத்தி னீப்போலென் சிந்தைநைந் தேங்கவுனைக்
காட்டி மறைந்துவிட்டாய் கண்ணே பராபரமே. ௨௫

அட்டமா மாயையினிற் சுட்டெரிந்த கொள்ளிக்
கட்டைவிற காக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. ௨௬

வேல்விழியார் காம வேட்கை யளற்றிலெனைக்
கால்மாற்ற விட்டுவிட்டாய் கண்ணே பராபரமே. ௨௭

வீடுகா டென்று விதித்ததுவு மல்லாமற்
காடுவீ டாகவிட்டாய் கண்ணே பராபரமே. ௨௮

ஓடாம லோடி யுலகைவலஞ் சுற்றுதற்கோ
காடோட வாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. ௨௯

ஈடோயா னுன்றனக்கு மென்மீதி லேனுவிக்
காடுநயஞ் செய்துவிட்டாய் கண்ணே பராபரமே. ௩0

அச்சமில்லாப் புல்வேட ரைவருக்கு மென்னறிவைக்
கைச்சூறை யாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. ௩௧

வில்லங்க மற்று விளக்கொளிபோ னின்றநெஞ்சைக்
கல்லங்க மாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. ௩௨

மண்ணாதி மூவாசை மாமாயை முக்கூட்டுக்
கண்ணியுட்சிட் டாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. ௩௩

கொண்டனைத்துக் கொள்ளுங் குணங்குடியான் சீரடியைக்
கண்டனைக்க நீயருளாய் கண்ணே பராபரமே. ௩௪

எட்டி லெழுதவொண்ணு விறையேயுன் றன்வடிவைக்
காட்டிக் கொடுத்தருளாய் கண்ணே பராபரமே. ௩௫

மைச்சினிச்சி போலு மணக்கோலப் பெண்போலுங்
கைச்சரசஞ் செய்தருளாய் கண்ணே பராபரமே. ௩௬

நிதியாசை யற்று நிரஞ்சனமாய் நின்றிடநற்
கதியாசை தந்தருளாய் கண்ணே பராபரமே. ௩௭

நாதவிந்தால் நின்றதுவு நானென் றுபதேசங்
காதி லுரைத்தருளாய் கண்ணே பராபரமே. ௩௮

நாதவசி யாகி மலைமுழையிற் புக்கவுன்மேற்
காதலொன்று தந்தருளாய் கண்ணே பராபரமே. ௩௯

நிற்குணத்தைக் கொண்டு நிருவிகற்பஞ் சாதிக்கக்
கற்குணத்தைத் தீர்த்தருளென் கண்ணே பராபரமே. ௪0

சென்மந் தொலைத்தடிமை சின்மயமாய் நின்றிடவுங்
கன்மந் தொலைத்தருளாய் கண்ணே பராபரமே. ௪௧

சிந்தை யொளிபரப்பிச் சிதறுவன் கண்டாயோ
கந்தனையுந் தந்தருளாய் கண்ணே பராபரமே. ௪௨

அஷ்டாங்க யோகமதி லாசையற வேயெனது
கட்டைவெட்டு முன்னருளாய் கண்ணே பராபரமே. ௪௩

விற்புருவத் தாடுவிளங்கு மொளி பந்தாடக்
கற்பித் தருளாயென் கண்ணே பராபரமே. ௪௪

ஒப்பி லருளாழி யோடவடி யேற்குமொரு
கப்பலாய் வந்தருளாய் கண்ணே பராபரமே. ௪௫

உனையாள்வோ மென்றடிமை யுள்ளங் குளிர்ந்திடநின்
கனிவாய் திறந்தருளாய் கண்ணே பராபரமே. ௪௬

பொய்கோத்த மெய்யதனைப் போட்டுவிடு முன்னமெனைக்
கைகோத் தணைத்தருளாய் கண்ணே பராபரமே. ௪௭

வாய்ச்சதெனக் கென்று மகிழ்ச்சிகொண்டு நின்றிடநின்
காட்சி யளித்தருளாய் கண்ணே பராபரமே. ௪௮

மலைக்கு மலைதிரிந்து மனுவாக வேமைழமனக்
கலக்கந் தவிர்த்தருளாய் கண்ணே பராபரமே. ௪௯

நாணு மடவாரை நான்கைதழு வக்கனவுங்
காணாது காத்தருளாய் கண்ணே பராபரமே. ௫0

தொண்ட ரிடஞ்சென் றிடவுந் தொண்டுசெய்து நின்றிடவுங்
கண்டித்து வைத்தருளாய் கண்ணே பராபரமே. ௫௧

மூலவர்க்க மாக முழுமதிப்பா லுங்கொடுத்துக்
காலபயந் தீர்த்தருளாய் கண்ணே பராபரமே. ௫௨

சோற்று லெடுத்த சுவரிடியா மற்பாது
காத்துமுகம் பார்த்தருளாய் கண்ணே பராபரமே. ௫௩

மூலக் கனன்மூட்டி மூட்டிவரு காலரையுங்
காலா லுதைத்தருளாய் கண்ணே பராபரமே. ௫௪

சிட்டனென வும்பூசை செய்தேனு மிப்பாவிக்
கட்டைகடைத் தேறவைத்தாள் கண்ணே பராபரமே. ௫௫

எட்டுமோ ரெட்டையுமெட் டெட்டுக் கயிறதனாற்
கட்டவுநல் விஷ்டம்வைத்தாள் கண்ணே பராபரமே. ௫௬

ஆதார மாறு மடுக்கடுக்கா கக்கடத்திக்
காதுக்குமே லேற்றிவைத்தாள் கண்ணே பராபரமே. ௫௭

கும்பித்து ரேசித்துட் கொள்ளும் படிக்குதவிக்
கம்பமுனைக் காட்டிவைத்தாள் கண்ணே பராபரமே. ௫௮

பட்டிப் பசுப்பாலைப் பக்குவத் துடன்காலைக்
கட்டிக் கறந்தளித்தாள் கண்ணே பராபரமே. ௫௯

நில்லா வுடற்கு நிலையங் கொடுக்குமொரு
கல்லாவின் பாலளித்தாள் கண்ணே பராபரமே. ௬0

சோமப்பா லூட்டிச் சுரந்தவா மப்பாலுங்
காமப்பா லுங்கொடுத்தாள் கண்ணே பராபரமே. ௬௧

மண்டைநடு மண்டலத்துண் மண்டியமு துண்டிடவுங்
கண்டங் கடத்திவைத்தாள் கண்ணே பராபரமே.

மூலாதா ரத்துண் முனைகொண் டுயர்ந்தெழுந்த
காலாற் கனறெளித்தாள் கண்ணே பராபரமே. ௬௩

ஆயுங் கலையிரண்டு மாயா தடக்கியென் றன்
காய நிலைக்கவைத்தாள் கண்ணே பராபரமே. ௬௪

அற்ப வுடலா லருந்தவமே புரிந்திடவுங்
கற்பமுறை கைக்களித்தாள் கண்ணே பராபரமே. ௬௫

அண்டபிண்ட மென்றுநின் றாடுந் திருக்கூத்தைக்
கண்டுகளி கூரவைத்தாள் கண்ணே பராபரமே. ௬௬

எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணும மென்றன்மனக்
கண்ணாடிக் குள்ளளித்தாள் கண்ணே பராபரமே. ௬௭

எவ்வுலகுந் தானா யிருந்தவனை யான்றொழவுங்
கவ்வுமலக் கட்டறுத்தாள் கண்ணே பராபரமே. ௬௮

அற்ப வுடல மழிந்திடுமுன் றீபமிட்ட
கர்ப்பூர மாக்கிவைத்தாள் கண்ணே பராபரமே. ௬௯

விலங்கினங்க ளோடு வீறிடவு மேழைநெஞ்சு
கலங்காத வண்ணம்வைத்தாள் கண்ணே பராபரமே. ௭0

அடுத்துக் கெடுக்கு மரிவையர்க்கா ளாகாமல்
கடக்கக் கடத்தி வைத்தாள் கண்ணே பராபரமே. ௭௧

நாற்றந் தொலைய நறவணையு நாரியர்தங்
காற்றும் படாதுவைத்தாள் கண்ணே பராபரமே. ௭௨

ஆணிப்பொன் மேரு வாமுனையு முன்னடிமை
காணுங் கருணைவைத்தாள் கண்ணே பராபரமே. ௭௩

வனவாச மேக வரமளித்துன் பொற்பதத்தைக்
கனமா யிறைஞ்ச வைத்தாள் கண்ணே பராபரமே. ௭௪

எட்டிப் பிடித்தாலு மெட்டாது நின்றவனைக்
கட்டிப் பிடிக்கவைத்தாள் கண்ணே பராபரமே. ௭௫

மதபேத மோதி மறைக்குமறை சொல்வதெல்லாங்
கதையாய் முடித்துவைத்தாள் கண்ணே பராபரமே. ௭௬

அண்டபிண்ட மாயுமதற் கப்பாலு நின்றவெளி
கண்டவுனைக் காட்டிவைத்தாள் கண்ணே பராபரமே. எஎ

உலையி லிடுமெழுகா யுள்ளம்பதைத் துருகிக்
கலங்கியதுங் கண்டிலையோ கண்ணே பராபரமே. எஅ

வெம்பிமிக நொந்தேன் மெலிந்தேனென் கண்ணீருங்
கம்பலையுங் கண்டிலையோ கண்ணே பராபரமே. எகூ

மெத்த மயலுற்று விருப்பமொடு பன்னூலுங்
கற்றும் பாழாக்கி விட்டேன் கண்ணே பராபரமே. அ0

பாலங்கடந்து பெரும் பாதைநட வாமலும்வீண்
காலங் கடத்திவிட்டேன் கண்ணே பராபரமே. அக

பூத்த மலரெடுத்துன் பொன்னடியை யானுமென்றுங்
காத்திருந்து பூசைசெய்வேன் கண்ணே பராபரமே. அஉ

விண்கொண்டு நின்று விளங்குமுனை யெக்காலங்
கண்கொண்டு காண்பேனென் கண்ணே பராபரமே. அ௩

ஐயோவென் செய்திற்பே ஞருமற்ற பாவியைநீ
கைவிட லாமோவென் கண்ணே பராபரமே. அச

நட்டநடு வீடுசென்று நானெளித்தி ருந்துனையுங்
கட்டித் தழுவேனோ கண்ணே பராபரமே. அரு

அல்லும் பகலு மடியேன் படுந்துயர்க்குக்
கல்லுங் கரைந்திடுமென் கண்ணே பராபரமே. அசா

பொன்னைப்பு தைத்துவைத்துப் போவா ருளந்தோறுங்
கன்னங் கருநிறங்காண் கண்ணே பராபரமே. அஎ

பணத்தைப் பணமெனவும் பார்த்ததுண்டோ வுன்றனுக்கென்
கணக்குந் தெரியாதோ கண்ணே பராபரமே. அஅ

நிற்கும் பொழுதாடை நெகிழ்ந்தா லுபசாரங்
கைக்குஞ் சொலுவதுண்டோ கண்ணே பராபரமே. அகூ

தடையி லுலகனைத்துந் தானா யிருந்துமொரு
கடுகெடையு மாறுமென் கண்ணே பராபரமே. ௯௦

உனக்கு ளெனைமறந்தோ ருள்ளக் கருத்தினுண்மாங்
கனிக்குளுறு வண்டானாய் கண்ணே பராபரமே. ௯௧

நெக்குருகி நின்ற நிலைதோன்றா நிர்க்குணத்தார்
கைக்குட்பந் தாடிநின்றாய் கண்ணே பராபரமே. ௯௨

பதித்த மனம்வாழி பரமார்த்தமும் வாழி
கதித்த நிலைவாழி கண்ணே பராபரமே. ௯௩

அத்துவிதம் வாழி யறிவகண்டி தம்வாழி
கர்த்தனே நீவாழி கண்ணே பராபரமே. ௯௪

தற்பர மேவாழி தாராதுந் தந்துதவுங்
கற்பகமே வாழியென் கண்ணே பராபரமே. ௯௫

சிற்பரமே வாழி சிவயோ கியர்வாழி
கற்பனையெல் லாம்வாழி கண்ணே பராபரமே. ௯௬

நற்பதவி யும்வாழி நவிலுன் மறைவாழி
கற்பதா ரிகள்வாழி கண்ணே பராபரமே. ௯௭

சித்தர் கணம்வாழி சின்மயந் தான்வாழி
கர்த்தவியம் வாழியென் கண்ணே பராபரமே. ௯௮

மாதவத்தோ ரும்வாழி மவுனமுத்தி ரையும்வாழி
காதலித் தோரும்வாழி கண்ணே பராபரமே. ௯௯

குவலயத்தோ ரும்வாழி குணங்குடியா ரும்வாழி
கவலையற்றோ ரும்வாழி கண்ணே பராபரமே. ௧௦௦

கண்மணிமாலைக்கண்ணி முற்றுப்பெற்றது.

ஆ பாடல் - ௮௮௦.

# மனோன்மணிக்கண்ணி.



மெய்தொழவு மேலு மேலுநந்தி கேஸ்வரனைக்
கைதொழ வுங்கனவு கண்டேன் மனோன்மணியே.
கோப்பா கவுமுனையான் கொண்டாடிப் பாடவுநீ
காப்பாக வுங்கனவு கண்டேன் மனோன்மணியே.
பெண்கணிர்த்தத் தோடுனையான் பிரியா மணம்புணரக்
கண்களூறங் காக்கனவு கண்டேன் மனோன்மணியே.
மலர்ந்திருக்கும் பொற்கமல மணவறையி லிருவருங்கை
கலந்திருக்க வுங்கனவு கண்டேன் மனோன்மணியே.
மெய்மஞ்சட் குளிர்ப்புங்கண் விழிப்புமெக் களிப்புமெனைக்
கைமிஞ்ச வுங்கனவு கண்டேன் மனோன்மணியே.
மைதீட்ட வுங்கயற்கண் மலரின் மலர்முலையிற்
கைபூட்ட வுங்கனவு கண்டேன் மனோன்மணியே.
மெய்தழுவ வும்மிருவர் மெய்யோடு மெய்நெருங்கக்
கைதழுவ வுங்கனவு கண்டேன் மனோன்மணியே.
வாமப்பா லைப்பெருக மறுவாலி பம்வருக
காமப்பா லுன்னைக் கனவுகண்டேன் மனோன்மணியே.
பாலனா கவுங்கான்ற பாலுணவு மென்னைவிட்டுக்
காலனே கவுங்கனவு கண்டேன் மனோன்மணியே.
வடியா வருளமிர்தம் வடியவடி யக்குணங்
குடியா ரொடுகனவிற் குடித்தேன் மனோன்மணியே.
கோடி பெருமதிகள் கூடு மொருமதிபோல்
வாடியெம் மானேயெம் மானே மனோன்மணியே.

கண்ணேயென் கண்மணியே கண்குளிர்ந்த கட்டழகுப்
பெண்ணே யமிர்தப் பிழம்பே மனோன்மணியே. கஉ

பெண்ணே மயிலினமே பேரனமே யென்றுனையென்
கண்ணிற் கிடக்கவென்று காண்பேன் மனோன்மணியே. கங

வன்ன வுடைக்குமுன்றன் வால வயதினுக்கும்
அன்ன நடைக்குமென்ற னாசை மனோன்மணியே. கச

கூந்த லிலங்கக் குரும்பைத் தனங்குலுங்க
நேர்ந்து நடம்புரிந்து நிற்பாய் மனோன்மணியே. க௫

துவளுந் துடியிடையுந் தோகை மயினடையும்
பவள விதழுமென்று பார்ப்பேன் மனோன்மணியே. க௬

மலர்மாலை கள்கிடந்து மார்பிற்பின்ன லாடுமுன்றன்
அலர்முலையும் யானென் றணைவேன் மனோன்மணியே. கஎ

வெய்யிற்பட் டாலும் வெதும்புமுட லாயுனது
மெய்யிற்றொட்டா லுங்கந்தம் வீசும் மனோன்மணியே. கஅ

காற்றுப்பட் டாலுங் கலங்குமென்றன் மேனியினீ
பார்த்துத் தொடவின்பம் படைப்பேன் மனோன்மணியே. கக

பிடியாரைப் போலும் பிடிப்பேன் முலையைக்குணங்
குடியாரைப் போலுங் குடிப்பேன் மனோன்மணியே. உ0

கூந்தலுக்கு நெய்தோய்த்துக் குளிர்மஞ்ச ணீராட்டி
வார்ந்துசிங் காரித்து வைப்பேன் மனோன்மணியே. உக

காலிற்பனி நீர்விட்டுக் கழுவிமடி மீதுவைப்பேன்
மேலிலத்த ரும்பூசி விடுவேன் மனோன்மணியே. உஉ

காதம் பரிமளிக்குங் கஸ்தூரிப் பொட்டிடுவேன்
போதுஞ் சவாதணிந்து புணர்வேன் மனோன்மணியே. உங

தலைக்குமினுக் கெண்ணெய் தடவிச்சடை பின்னிவைப்பேன்
முலைக்குவன்னக் கச்சிறுக்கி முடிப்பேன் மனோன்மணியே. உச

கட்டாடை வர்க்கமெல்லாங் கண்டு களித்துயர்ந்த
பட்டாடை வர்க்கம்வைத்துப் படைப்பேன் மனோன்மணியே. உரு

மூக்குகுத்தி காதுகுத்தி முழுவயிரந் தூக்கிவைப்பேன்
கோக்குமுத்துந் தூக்குமுத்துங் குவிப்பேன் மனோன்மணியே. உசு

கைக்குஞ் சரிகடகங் கல்லுமிழைத் துக்கொடுப்பேன்
மொய்குழற்குஞ் சடைப்பில்லை முடிப்பேன் மனோன்மணியே. உஎ

தங்கக்கொலு சுஞ்சிலம்புந் தண்டைரத்ந பாடகமுங்
கொங்கைக்கு மோகனமாலை கொடுப்பேன் மனோன்மணியே. உஅ

காலாழி பீலிமுதற் கன்னகையும் பொன்னகையும்
நாலாட் சுமைவேண்டி னடக்கு மனோன்மணியே. உகூ

முடிமீ தினுமகுட முடிசூட்டு வேனற்குணங்
குடிமா தவர்கள்குலக் கொழுந்தே மனோன்மணியே. ௩௦

சன்னிதா னத்திற் சரணஞ் சரணமென்று
சொன்ன மலர்தூவித் தொழுவேன் மனோன்மணியே. ௩க

கர்ப்பூர மேற்றிக் கரத்தீப வாலாத்தி
எப்பாரும் போற்ற வெடுப்பேன் மனோன்மணியே. ௩உ

முக்கால மும்பூசை முடிப்பேன்முக் காலமல்லால்
எக்கால மும்பொங்க லிடுவேன் மனோன்மணியே. ௩௩

சாதந்தளி கைசமைத்துச் சாம்பிராணித் தூபமிட்டுப்
பாதந் தொழுதிட்டுப் படைப்பேன் மனோன்மணியே. ௩௪

பச்சைப் பருப்புமுதற் பருப்பிற்பத்து வகைகடைவேன்
வச்சநறு நெய்யுருக்கி வார்ப்பேன் மனோன்மணியே. ௩௫

முட்டை பொரிப்பேன் முழுக்கோழியும் பொரிப்பேன்
றட்டைப்பீங் கானிற் றருவேன் மனோன்மணியே. ௩௬

ஆட்டுக்கறி யுங்கொள்வே னதிலனந்தம் வகைசமைப்பேன்
கூட்டுக்கறி யும்பண்ணிக் கொடுப்பேன் மனோன்மணியே. ௩௭

குட்டிக் கறிதானுங் குழம்புபண்ணித் தாளித்தோர்
சட்டிக் கறியேனுந் தருவேன் மனோன்மணியே. ௩அ

பால்பழமுந் தேனும் பலகார வர்க்கங்களும்
மேலுமே லும்பரப்பி விடுவேன் மனோன்மணியே. ௩௯

அடிக்கா யிரம்பொன்விலை யானாலு மீந்துகுணங்
குடிக்குண்மா ளிகைகட்டிக் கொடுப்பேன் மனோன்மணியே. ௪0

ஆணிப்பொன் மதிலுயர்ந்த வரண்மனையுந் தீர்ப்பாக
மாணிக்க மேவிளக்காய் வைப்பேன் மனோன்மணியே. ௪௧

துலங்குமணி மண்டபமுஞ் சொர்க்கமென வும்மிலங்கா
திலங்குமலங் காரஞ்செய் திடுவேன் மனோன்மணியே. ௪உ

ரத்தினங்கள் வைத்திழைத்தி ராவைப்பக லாக்குஞ்
சித்திரங்கள் வகைவகையாய்ச் செய்வேன் மனோன்மணியே. ௪௩

மண்ணு யமுந்தாமன் மனமே முழுவதினுங்
கண்ணாடி யாயிருக்கக் காண்பேன் மனோன்மணியே. ௪௪

மங்கா தொளிபரப்பும் மவுனமணி யாலுமொரு
சிங்கா சனமேடை செய்வேன் மனோன்மணியே. ௪௫

நாற்காலி கட்டில்பல நற்பவள வாசனங்கள்
நீக்கமறச் சுற்றும் நிறைப்பேன் மனோன்மணியே. ௪௬

பாதம்பூ சித்துப் பணிவிடைகள் செய்துநிற்க
மாதர்க ளோவனந்தம் வைப்பேன் மனோன்மணியே. ௪எ

புவனத் தரசரெல்லாம் போற்றிப் பணியவென்றன்
மவுன மலாணைமேல் வாழ்வாய் மனோன்மணியே. ௪அ

கட்டிலினுங் கூடி களிகூர்ந்து கொண்டிருப்போம்
தொட்டிலினு மாடிச் சுகிப்போ மனோன்மணியே. ௪௯

முடிமன்னர் தம்வாழ்வு முதலெவையு மெங்கள்குணங்
குடிமன்னர் தம்வாழ்வுங் கொடுப்பேன் மனோன்மணியே. ௫0

சொர்ன மலைமலையாய்த் தொகைவகையி லாதளிக்குங்
கர்ன னெனவுமெனைக் காண்பாய் மனோன்மணியே. ருக

போதத் தனம்புதைத்த பொக்கிஷமுங் கைகுவிப்பேன்
பாதத்தி னும்வீழ்ந்து பணிவேன் மனோன்மணியே. ருஉ

கிடையாப் பொருள்களெல்லாங் கிடைக்குமுன்ன நீயுமென்றற்
படையாப் பொருள்களெல்லாம் படைப்பாய் மனோன்மணியே.

தானு சமுத்திரம்போற் சான்றோர்க்கெல் லாமளிப்பாய்
சேனு சமுத்திரமுஞ் சேர்ப்பாய் மனோன்மணியே. ருச

முடிதூக்கு மன்னர் முதலெவரு முன்வாயிற்
படிகாக்கும் வாழ்க்கை படைப்பாய் மனோன்மணியே. ருரு

கவிராஜ ரும்விருது கட்டியங்கள் கூறிநிற்பார்
தவராஜ ரும்போற்றத் தவமூர் மனோன்மணியே. ருசா

உன்மீதி லாசித் துயிர்பொருளுன் றாட்களிப்ப
என்மீதி லாசையுனக் கிலையேன் மனோன்மணியே. ருஎ

உள்ள துரியதெல்லா மொப்புக்கொண்ட பின்னலவோ
கள்ள மனம்படைக்கக் கற்றாய் மனோன்மணியே. ருஅ

வேசைக் குணத்தை விரும்புவா யென்றறிந்தாற்
காசைப் பணத்தைநான் காட்டேன் மனோன்மணியே. ருகூ

படையாதெல் லாமென்றற் படைத்துப்பர தேசிகுணங்
குடியாரை யோதேடிக் கொண்டாய் மனோன்மணியே. சா0

உத்தமிப் பெண்ணென் றுவந்தேனிப் போதுன்றன்
பத்தினித்த னத்தைநன் றாய்ப் பார்த்தேன் மனோன்மணியே. சாக

என்பத் துனக்கிருந்தா விராஜ ராஜேஸ்வரியாய்
ஐம்பத் தறுதேசமுநீ யாள்வாய் மனோன்மணியே. சாஉ

உள்ள மணவான னுனக்கெவனோ வென்னைவிடக்
கள்ளமண வாளனிச்சை கடிதோ மனோன்மணியே. சாங

வேசியென்ற பேர்படைத்து வெளியிற்புறப் பட்டவளைத்
தாசியென்று சொல்லத் தகாதோ மனோன்மணியே. சுச

ஆடாது மாடி யவிசாரி யானவுனைப்
பாடாதும் பாடியென்ன பயமோ மனோன்மணியே. சுரு

மூக்கு முனைக்குமுழம் மூன்றேனே பத்தினிபோல்
நாக்கு முனைக்குமுழ நாலேன் மனோன்மணியே. சுசு

பானைச்சோ றெல்லாம் பதம்பார்த்துத் தின்றவினி
மான மழியிலுயிர் மயிர்தான் மனோன்மணியே. சுஎ

இனிக்கண் டறிந்துகொள விவனென் பிளையாளுற்
றனிக்கண்ட போதுபுத்தி தருவான் மனோன்மணியே. சுஅ

பல்லை யிதழ்கடிக்கப் பானை தடியொடுக்கக்
கல்லைத்தேங் காயுடைக்கக் காண்பாய் மனோன்மணியே. சுகூ

தடிபோ லிருந்துனையான் சாதிகெட்ட பாழுங்குணங்
குடியார்க்கெப் படிகூட்டிக் கொடுப்பேன் மனோன்மணியே. எ0

போனதெல் லாம்போச்சு பொழுதும் விடிந்ததினி
யானதெல் லாமனத்தி னுடேன் மனோன்மணியே. எக

மல்லாந்து நான்படுத்து மார்பிற்றுப்பிக் கொண்டிழினும்
பல்லைக்குத்தியு முதிரந்தோயப் பார்ப்பேன் மனோன்மணியே. எஉ

என்னைவிட்டால் மாப்பிள்ளைமா ரெத்தனையோ வுன்றனுக்கே
உன்னைவிட்டாற் பெண்ணெனக்கு முண்டோ மனோன்மணியே.

தடித்தனமே செய்தாலுஞ் சமுசாரத் திற்படிந்து
குடித்தனஞ்செய் தாலென்மனக் குறையோ மனோன்மணியே. எச

தொடுத்தணைத்துக் கொண்டே துயில்வன்மற்ற நேரமெல்லாம்
எடுத்தணைத்துக் கொண்டே யிருப்பேன் மனோன்மணியே. எரு

படுத்துப் படுத்துநெஞ்சிற் பளிச்சுபளிச் சென்றுமுத்தங்
கொடுத்துக் கொடுத்துநான் கொள்வேன் மனோன்மணியே. எசு

வன்னச் செழும்பவள வாயிதழூ றச்சுவைத்துன்
கன்னத்தில் வீழ்ந்து கடிப்பேன் மனோன்மணியே. ௭௭

கச்சிறுக்கு மாதரின்பங் கைச்சிறுக்கும் போதவின்பம்
வைச்சிறுக்குக் கொங்கையிற்கை வைப்பேன் மனோன்மணியே. ௭௮

தித்தித் தொழுகுகாம தேனமிர்த ஆறலுண்பேன்
முத்திதழூ வித்தழுவி முகப்பேன் மனோன்மணியே. ௭௯

படியோர்க்கெல் லாமுயன்ற படியோர்க ளானகுணங்
குடியோர்கள் போலுமின்பங் கொள்வேன் மனோன்மணியே. ௮0

சேயாயு மென்மடியிற் செங்கீரை யாடியருட்
டாயாயு மங்கை தருவாய் மனோன்மணியே. ௮௧

அங்கைதந்து தந்தே யணைத்தா யருளமிர்தங்
கொங்கைதந்து தந்தே கொடுப்பாய் மனோன்மணியே. ௮௨

தாவி யணைத்தெதன் ருயேயுனை யென்றிந்தப்
பாவி மடியில்வைத்துப் பார்ப்பேன் மனோன்மணியே. ௮௩

ஏங்கியழு வேனோவுன் னிணையடியைக் காணமற்
றூங்கிவிழு வேனோவென் ருேழி மனோன்மணியே. ௮௪

உலைபோ லெரியுமென்ற னுளங்குளிர மேல்வளர்ந்த
மலைபோ லெழுந்தருளி வருவாய் மனோன்மணியே. ௮௫

கன்ம மறுவதெந்தக் காலமோ யானறியேன்
நன்மை தருவதெந்த நாளோ மனோன்மணியே. ௮௬

பன்னீ ரொழுகுமுன்றன் பாத மலரையென்றன்
சென்னிமீ தென்றுமருள் செய்வாய் மனோன்மணியே. ௮௭

தாயினுமிக் காங்கருணைத் தயாநிதியே யிவ்வுரையை
நாயினுமிக் காங்கடையே னவின்றேன் மனோன்மணியே. ௮௮

கால்பிடித்துக் கண்ணில்வைத்துக் கைகுவித்து மெய்மயங்கி
மால்பிடித்துச் சொன்னதெல்லா மகிழ்வாய் மனோன்மணியே. ௮௯

அடியானை யுன்னடியார்க் கடியானு மாக்கிகுணங்
குடியா னெனப்பிரியங் கொடுப்பாய் மனோன்மணியே. ௯0

உச்சிதவச் சிரமலையே யொப்பில்லா மாணிக்கமே
கச்சிதப் பச்சைமர கதமே மனோன்மணியே. ௯௧

செப்புறு வாணிமுத்தே சிறந்தபவ ளக்கொடியே
புட்பரா கக்கமலப் பூவே மனோன்மணியே. ௯௨

கோமே தகமே குளிர்ந்தவயி டூரியமே
மாமேரு வேங்கை மலையே மனோன்மணியே. ௯௩

வற்றா வருட்செல்வ வாழ்வேகரு ணாநிதியே
பொற்றா மரைக்கமலப் பொருட்டே மனோன்மணியே. ௯௪

அல்லி மலரே யலர்செங்கழு நீர்மலரே
மல்லிகைக் கொத்து மலரே மனோன்மணியே. ௯௫

பொன்மலரே பன்மலரே புகழ்தருபன் னீர்மலரே
மன்மத பாணமா மலரே மனோன்மணியே. ௯௬

குடலை நிறைந்ததொரு கொக்கலரிச் செம்மலரே
மடலவிழ்ந்த செந்தாழை மலரே மனோன்மணியே. ௯௭

பூக்கு மருண்மலரே புளிக்காத மாமலரே
வாக்கு மலரேகண் மலரே மனோன்மணியே. ௯௮

வஞ்சியர்செய் மோசமுடன் மறலிசெயு நாசத்திற்கு
மஞ்சி யுனக்கடிமை யானேன் மனோன்மணியே. ௯௯

அடியாரும் வாழியிந்த வடியேனும் வாழிகுணங்
குடியாரும் வாழிகுணக் குன்றே மனோன்மணியே. ௧00

உமையாள் பாத முன்னிற்க.

ஆதியந்தங் கடந்தவுமை யாடன் பாதம்
அகண்டபரி பூரணமா மையர் பாதஞ்

சோதியந்தங் கடந்தகண பதியின் பாதந்
 தொழுதிறைஞ்சிக் கரங்குவித்துப் போற்றிசெய்து
வாதியந்தங் கடந்தநந்தி பாத மென்றும்
 வாலைமனோன் மணியம்மை பாத மென்றும்
ஓதியந்தங் கடந்தண்ட மிரண்ட தாக
 ஒன்றுமறி யாவறிஞ னுரைசெய் தானே.

மனோன்மணிக்கண்ணி முற்றுப்பெற்றது.

ஆகூ பாடல்-கூஅ0.

# நந்தீஸ்வரக்கண்ணி.



ஆதியந்தங் கடந்தவுமை யாளருணு தாந்தச்
சோதியந்தங் கடந்தசெழுஞ் சுடரேநந் தீஸ்வரனே. க

முடியடியாய் நின்றநடு மூல மணிவிளக்கே
அடிமுடியாய் நின்றநடு வணையோநந் தீஸ்வரனே. உ

கர்த்தனே யானுன் கருணைத் திருவடிக்கே
எத்தனைதான் றெண்ட னிடுவேனந் தீஸ்வரனே. ௩

தீர்க்கதெண்ட னிட்டேன் றிருவடியைப் போற்றிசெய்தேன்
வாக்கு நடக்க வரமருணந் தீஸ்வரனே. ௪

வாசில் பரவெளியே மவுனமணி மாளிகையில்
வாயிற் பெருவழியே மகத்தேனந் தீஸ்வரனே. ௫

மகத்தோனே ஞான மழையே யருள்வெள்ள
முகத்தோனே மோன முளையோநந் தீஸ்வரனே. ௬

ஞானம் விளைவேற்று நல்லசமு சாரிகட்கு
மோன மழையூற்று முகிலேநந் தீஸ்வரனே. ௭

மும்மூல யோக முழுதுஞ்சித்தி செய்துதர
உன்னாலே யாகு முயிரேநந் தீஸ்வரனே. ௮

சமர்கொடுத்து வென்றோர்க்கு சாம்பவியைக் கைப்படுத்தித்
தமர்விடுத்து நீக்கித் தருவாய்நந் தீஸ்வரனே. ௯

நல்லோர்க்கு நீகாட்ட நல்குங் குணங்குடிவாழ்
வெல்லோர்க்கு நேர்காட்ட வெளிதோநந் தீஸ்வரனே. க0

இல்லி னிடங்காட்டி யிதழ்விரியுஞ் செங்கமல
வல்லி னிடங்காட்டி வைப்பாய் நந்தீஸ்வரனே. கக

சாமிதனை யுஞ்சுத்த சைதந்ய மானசிவ
காமிதனை யுமென்று காண்பேனந் தீஸ்வரனே.

உமையாளு மெய்யா யுவந்தடிமை கொள்ளும்வண்ணம்
எமையாளு மையா விறையேநந் தீஸ்வரனே. க௩

கேசரத்தைக் காட்டி யொளியா டன்னருட்பால்
ஆசரித்தே யூட்ட வருள்வாய்நந் தீஸ்வரனே. க௪

சத்தி சிவமுதலாச் சாம்பவியம் பாளருளிற்
செத்த சிவமுதலாச் சித்தாநந் தீஸ்வரனே. க௫

சித்தாளை யீன்ற சிறுபெண்ணுந் தாளிரண்டு
பொற்றாளை யென்றோ புணர்வேனந் தீஸ்வரனே. க௬

பத்து வயதுடைய பாவையரை யன்றோநீ
சித்தர்க்கெல் லாந்தாயாய்ச் செய்தாய்நந் தீஸ்வரனே. க௭

காமரூபி யாகித்ய கல்யாண சுந்தரியை
ஓமரூபி யையெற்கு முதவுநந் தீஸ்வரனே. க௮

கேசரியா டன்கருணை கிட்டினன்றோ வாசாம
கோசரவாழ் வெல்லாங் கொடுப்பாய்நந் தீஸ்வரனே. க௯

மூலவொளி சூட்டி மோனக் குணங்குடிக்கும்
மேலைவழி காட்டி விடுவாய்நந் தீஸ்வரனே. உ0

கண்டப்பா லங்கடத்தி கமலாசனத் தேற்றி
அண்டப்பா லுங்கொடுத்தே யருள்வாய்நந் தீஸ்வரனே. உ௧

செங்கமல பூடச் செல்வியர்தாஞ் சித்தம்வைத்தாற்
றங்கமலை கூடத் தருவாணந் தீஸ்வரனே.

போதகத்தைப் பூட்டிப் புருவமையத் தாயமெற்கும்
வாதவித்தை காட்ட வருவாய்நந் தீஸ்வரனே.

ரசயோக சித்து நயனருளி ஞலடிமை
நிசயோக முற்று நிலைப்பேனந் தீஸ்வரனே.

மகாவித்தை காய்ப்பதற்கு மதியமிர்த ஊறலுண்டே
லகிரியுற்று நிற்பதற்கு லபிப்பாய்நந் தீஸ்வரனே. உ௫

குப்பை வழலையெனுங் கோழையெல்லாங் கக்கவைத்துக்
கற்ப வழலைவரக் காட்டுநந் தீஸ்வரனே. உ௬

கற்ப வழலைவரக் காட்டிகற்ப முண்டதற்பின்
பற்ப வழலைமுறை பகர்வாய்நந் தீஸ்வரனே. உ௭

சூதமுத னீற்றிச் சொன்னமதி யமிர்தப்ர
சாதமதி னூற்றித் தருவாய்நந் தீஸ்வரனே. உ௮

அற்பமாந் தேகமதா யடியே னெடுத்தவுடல்
கற்பதேக மாகக் கணிப்பாய்நந் தீஸ்வரனே. உ௯

உமைநம்பி னோர்வாழு மோங்கு குணங்குடியார்க்
கெமனும் பினையாரு மெதிரோநந் தீஸ்வரனே. ௩0

ஈஸ்வரரி லொன்றாய் முடித்தருள்வா யாகிலெனைச்
சஈஸ்வரர் கூட்டச் சாட்டாய்நந் தீஸ்வரனே. ௩௧

காலனும் போய்விடுவான் காலங் கடந்துசிறு
பாலனும் மாய்விடுவேன் பரமேநந் தீஸ்வரனே. ௩உ

கவன மணிமுதலாய்க் கட்டியென் கைகளிக்க
மவுன மணித்தாய்க்கு வகுப்பாய்நந் தீஸ்வரனே. ௩௩

மாயை வலைவீசி மயக்காம லென்றன்மேல்
நேய வலைவீச நிகழ்த்துநந் தீஸ்வரனே. ௩௪

தோகை யிளமின்னார் சுகபோக மும்பசியும்
தியாக வழிசொன்னாற் போதும்நந் தீஸ்வரனே. ௩௫

பெண்ணா யுலகமெல்லாம் பிணக்காட தாக்கியையோ
மண்ணாய் மடிவதென்ன மாயம்நந் தீஸ்வரனே. ௩௬

சையோகப் பித்தைவெல்லச் சமர்த்தோடு கச்சைகட்டு
மெய்யோகப் புத்திசொல்ல வேண்டும்நந் தீஸ்வரனே. ௩௭

